லேசான காகிதப்பதிப்பு
தனிப்பிரதி, 5½ அணா.
பழைய பிரதி, 6 ,,

சந்தாவிலை விவரம்,
ஒரு வருஷத்துக்கு ரூ. 4.
6 மாதத்துக்கு ,, 2-2.




அறிவைப்பரவச் செய்வதற்கான

மாதாந்தரத் தமிழ்ப்பத்திரிகை.

*The Publishing Agency reserves to itself the right of republishing separately matters that appear in the Viveka Chintamani.*

புத்தகம் 10.] 1901௵ ஜூன்௴ [இலக்கம் 2.

## Terms of Subscription to the 'Viveka Chintamani.'

**Thick Paper Edition** for Patrons, Reading Rooms, School and Circulating Libraries, &c.

Minimum Subscription Rs. 5 per annum.

Single Copy 7½ As. : Back Nos. 8 As. each.

ENGLISH & FOREIGN SUBSCRIPTION 7*s*. 6*d*. NET PER ANNUM.

**Thin Paper Edition** for the People :—

SUBSCRN. PRICE : YEARLY RS. 4 ; HALF-YEARLY RS. 2-2.

SINGLE COPY, CURRENT NO. 5½ AS. ; BACK NOS. 6 AS. EACH.

ENGLISH & FOREIGN SUBSCRIPTION 5*s*. 6*d*. NET PER ANNUM.

**If strictly Prepaid** at the commencement of the term, (*i. e.*, in May of each year) 8 As. discount, off the annual rate, and 4 As. off the half-yearly rate.

Subscriptions entered to begin with only April or May of each year. Enrolled Subscribers may not withdraw except at the end of the year.

☞ To regular annual subscribers 2 months' grace is allowed for the prepayment of subscription, and in the case of regular half-yearly subscribers 3 weeks' time, within which all subscriptions should be paid to entitle them to the discounts allowed.

Subscriptions cannot be closed in the middle of a *Volume*, though regular subscribers may elect to pay their subscriptions in half-yearly instalments. *All notices for discontinuance are to be given in the beginning of the new year, i. e., in April or May; for otherwise one should have to pay for the whole of the current volume.* Outstanding subscriptions are often realised by V. P. P. to prevent accumulation of arrears.

In all business correspondence, Subscribers are requested to quote their register number found on the wrapper, as it would ensure prompt attention and save vexatious delay and needless correspondence.

## விவேகசிந்தாமணி சந்தாவிவரம்.

**தளமான காகிதப்பதிப்பு** :—அத்தியக்ஷர்கள், ரீடிங்ரூம்கள், புத்தகசாலைகள் முதலான ஸ்தாபனங்களுக்கு உபயோகமானது. ☞ வருஷ சந்தா குறைந்தது ரூ. 5. தனிப்பிரதி 7½ அணா. பழைய பிரதி 8 அணா.

**லேசானகாகிதப்பதிப்பு** :—சாதாரணமாய் எல்லா ஜனங்களுக்கும் உபயோகமானது.

வருஷசந்தா ரூ. 4. 6-மாசத்துக்கு ரூ. 2-2.
தனிப்பிரதி 5½ அணா. பழைய பிரதி 6 அணா.

**வருஷாரம்பத்திலே** (அதாவது மேமாசத்தில்) தவறாமல் கட்டினால் வருஷசந்தாவில் 8 அணாவும், 6-மாச சந்தாவில் 4 அணாவும் தள்ளிக்கொடுக்கப்படும்.

எப்பிரல் அல்லது மேமாதம் துவக்கியே சந்தாக்கணக்கு வைக்கப்படும். ரிஜிஸ்தரான சந்தா தாரர்கள் வருஷமுடிவிலன்றி மற்றபடி சந்தாவை நிறுத்துதல் கூடாது.

☞ வருஷக்கணக்காக ஒழுங்காய்ச் சந்தாசெலுத்திவருகிறவர்களுக்கு இரண்டு மாசத்தவணையும், 6-மாசக்கணக்காக ஒழுங்காய்ச்சந்தா செலுத்திவருகிறவர்களுக்கு மூன்று வாரத்தவணையும் கொடுக்கப்படும். அதற்குள் சந்தாவை முன்பணமாகச் செலுத்துகிறவர்களுக்கே மேற்கண்ட தள்ளுபடி செய்துகொடுக்கப்படும்.

பத்திரிகையை வருஷமத்தியில் நிறுத்தக்கூடாது. நிறுத்தவிரும்புகிறவர்கள் வருஷாரம்பத்தில் அதாவது எப்பிரல் அல்லது மே மாசத்திலே நோட்டீஸ் கொடுக்கவேண்டும்; அப்படிக்கின்றி மத்தியில் நிறுத்தினால் அந்தவருஷ முழுவதற்குமுள்ள சந்தாவைச் செலுத்திவிடவேண்டும். சந்தாபாக்கிகள் V. P. P. மூலமாக வசூல்செய்யப்படும்.

கையொப்பக்காரர்கள் ஆபீசுக்குக் கடிதமெழுதும்போதெல்லாம் அவர்கள் ரிஜிஸ்தர் நம்பரைக் குறிப்பிட்டெழுத வேண்டும். அப்படிச்செய்வதால் அவர்கள் எழுதும் கடிதம் உடனே கவனிக்கப்படுவதன்றி அதிக தாமதத்துக்கும் வீண் கடிதப்போக்குவரவுக்கும் இடமிராது.

## ஆநந்தவல்லி.

ஓர் உண்மையான கதை.

I

"தாயேயாகி வளர்த்தனை, போற்றி
மெய்தருவேதியனாகி வினைகெடக்
கைதரவல்ல கடவுள், போற்றி."

தென்னாட்டில் சோழன் அரசாண்ட காலத்தில் பூலோகத்திலே குபேரன் பட்டணம்போல் விளங்கியது காஞ்சிமாநகரம். இப்பொன்னகரிலிருந்தாண்ட சோழ மகாராஜன் காட்டில் வேட்டையாடுவோன் புறப்பட்டு காட்டுப்பிராந்தியமான ஆற்காட்டுப்பக்கம் தன் பரிவாரங்கள் புடைசூழச்சென்று, இப்பொழுது ஆற்காடு என்னும் ஊரிருக்குமிடத்துக்கு முக்காத வழிக்கப்பால் முகாம் தங்கியிருந்தான். அரசன் வேட்டையாடி வியர்த்து விடாய்த்து அலுப்புத்தீர இளைப்பாறியிருந்து பாளையம் பெயர்ந்து பட்டினத்துக்குப் புறப்பட ஆயத்தமாயிருக்குங்கால், வில்லி வீரனொருவன் அரசன் சமுகத்திற்குவந்து அடியற்றமரம்போல் விழுந்து தண்டனிட்டு உடல் வியர்த்து விலுவிலுக்க நாக்குழறி வாய் பேசமாட்டாமல் தடுமாறினான். அரசன் மந்திரியைவிட்டு அவன் செய்தி யென்னவென்று விசாரிக்கச்சொன்னான்.

மந்திரி விசாரிக்க,

"சாமி, அதிசயங்க, மகராஜ், தப்புசெய்திட்டாங்க, ராஜா, கண்ணெடுத்துப்பார்க்கணுங்க" என்று உளரினான். "அட என்னடா சங்கதி? நடந்ததைச் சொல்லேன் தெளிவாக" என்று மந்திரி அதட்டிக்கேட்க, அவன்பின்னுமதிகமாகக் குழறிப்பேசலுற்றான். கடைசியில் வெகு பிரயாசைப்பட்டு அவனைச் சாந்தப்படுத்தி பலவித உபாயங்களினால் அவன் சொல்லவந்ததை மந்திரி யுள்ளபடி யுணர்ந்துகொண்டு அரசனிடம்சென்று விண்ணப்பம் செய்துகொண்டான்.

"ராஜேந்திர, வில்லிகள் மலையில் காடுவெட்டப்போனவிடத்து ஒரு கல்லில் காயம்பட இரத்தம் தெறித்ததாம். அங்கு ஏதோ சாமி யிருக்கவேண்டுமாதலால் மகாராஜா வந்து பார்வையிட்டு அந்த ஸ்வாமியை யெடுத்துக் கோயில்கட்டி பிரதிஷ்டை பண்ணவேண்டுமென்று அந்த வில்லி வீரன் கேட்டுக்கொள்ள வந்திருக்கிறான். தங்கள் சித்தம் எப்படியோ தெரிந்துகொள்ளக் காத்திருக்கிறேன்" என்று மந்திரி சொல்ல, சோழ மஹாராஜா "வில்லிகள் எப்போதும் புத்தியில்லா மூடர்கள். எவனாது காடுவெட்டுகையில் தன்னை யறியாது மற்றொருவன் காலிற்படக் கோடரியை வீசியிருப்பான். காயம்பட்டவனும் காயம்பட்டது தெரியாதிருக்க இந்த மூடமதி இரத்தத்தைக்கண்டு அதிசயமென்று ஓடி வந்திருப்பான். அவனைப் போகச்சொல். நம் பிரயாணத்தை நிறுத்த இயலாது" என்று பதில் சொல்லிவிட்டு தனது பரிவாரங்கள் புடைசூழப் பிரயாணமாகிச் சென்றான்.

அரசன் பிரயாணப்பட்டுக் காதவழிதூரம் செல்லுமுன் காற்றும் மழையும் அதிகரிக்க வானம் நள்ளிருளாய் மூடிக்கொண்டு மின்னலும் இடியும் பயங்கரமாயிருந்தது. அரசன் இப்படி எதிர்பாராதபடி மின்னலிடியோடு காற்றுமழை சேர்ந்ததைக்கண்டு மனநொந்து இதன் காரணமென்னோ வென்றுணரவெண்ணி வானத்தையண்ணாந்து பார்க்கையில் பளிச்சென்று ஒரு மின்னல் ஆகாயமுழுதும் பரவி யொளித்தது. அந்த மின்னலொளியோடு இவன் கண்ணொளியும் மறைந்தது. அரசன் திடீரென்று கண்ணிழந்தவனாக, மந்திரி ஓடிவந்து "ராஜேந்திர, இது தெய்வ குற்றமாயிருக்கலாம். அந்த வில்லி சொன்னதைக்கேட்டும் ஆராய்ந்துபாராது வந்தோமே!" யென்று ஞாபகமூட்ட, அரசன் தன் ஹிருதயத்தில் அம்பு பாய்ந்ததுபோல் திடுக்கிட்டுத் துடித்தான். "ஓஹோ! நாம் பேரபராதி யானோமே" யென்று மனங்கரைந்துருகி அந்தக்ஷணமே தன் பரிவாரங்கள் வந்த

வழியைப் பார்த்துக்கொண்டு திரும்பிச் செல்லும்படி உத்தரவு செய்தான். அரசன் திரும்பின சிறிது நேரத்திற்கெல்லாம் காற்று மழை நின்று வானம் வெளுத்தது. தான் தெய்வாபராதியாய் விட்டதைக்குறித்து எண்ணி யெண்ணி மனம் புண்ணாய் நைந்துருகித் தன்னுள் கடவுளின் அபார மகிமையைத் தியானித்து,

"மின்னார் உருவ விகிர்தா, போற்றி!
கன்னார் உரித்த கனியே, போற்றி!
காவாய் கனகக்குன்றே, போற்றி!
ஆவா, என்றனக்கருளாய், போற்றி!
படைப்பாய், காப்பாய், துடைப்பாய், போற்றி!
இடரைக்களையும் எந்தாய், போற்றி!
ஈசா போற்றி, இறைவா, போற்றி!
தேசப்பளிங்கின் திரளே, போற்றி!
அரைசே போற்றி, அமுதே போற்றி!
விரைசேர்சரண விகிர்தா, போற்றி!"

என்று அவரைத் தோத்திரம் செய்துகொண்டு இவ்வபராதத்தைத் தீர்த்துக்கொண்ட பின்னரே மறுவிஷயத்தை யென் சிந்தையிலெண்ணுவேனென்று திடவைராக்கியத்தோடு தீர்மானஞ்செய்துகொண்டு தன் ராஜாங்கங்களை யெல்லாம் நிவர்த்தித்துத் தள்ளிவிட்டு பாதசாரியாய் வழிநடந்து சென்றான். எல்லாரும் நடுநடுங்கிப்போனார்கள். வான் வெளுத்த சிறிது நேரத்திற்கெல்லாம் அரசனுக்குக் கட்பார்வையும் திரும்பியது. எல்லாரும் உத்ஸாகமே விட்டு அதிக சந்தோஷத்தோடு இனி நடக்கப்போகிற அதிசயத்தைப் பார்க்கவேண்டுமென்று வெகு விரைவாய் வழிநடந்துசென்றார்கள். திரும்பிவந்து வில்லிவீரனைக் கண்டு பிடித்து அவன் பார்க்க அழைத்த இடத்தைக் காட்டும்படி கேட்க, அவனும் அரசன், மந்திரி, பிரதானிகள் பின்தொடர்ந்துவர முன்சென்று மலைமேலோரிடத்தைக் காட்டினான். அந்த விடத்தில் மரங்களடர்ந்த புதரில் ஸ்வயம்பு லிங்கம் ஒன்று இருக்கக்கண்டு, அரசனும் கூடவிருந்தவர்களும் பிரமித்து ஸ்தம்பித்துப் போனார்கள். பிறகு பிரக்ஞைபெற்று அச்சுயம்புலிங்கத்தை ப்ரதக்ஷிணஞ்செய்து நமஸ்கரித்து, உடனே அவ்விடத்தைக் காடுவெட்டித் திருத்தி வெளியாக்கி அந்த மலைமேல்தானே ஒரு கோயில்கட்டி ஸ்வாமியையும் அம்மனையும் பிரதிஷ்டைசெய்து நித்தியப்படி பூஜைக்குவேண்டிய ஏற்பாடுகளும் செய்து முடித்து அரசன் தன் நலைநகர் வந்து சேர்ந்தான். அந்தக் கோயில் இன்றுவரையிலிருக்கின்றது. ஸ்வாமியின் பெயர் கனககிரீசுவரர். தேவியின் பெயர் பெரியநாயகி அம்மன்.

அந்த அம்மன் சந்நிதி ஸ்வாமிசந்நிதியைவிட மிகச் சக்தியுள்ளதாக விளங்கியதால் காடாரம்பமாயிருந்த அவ்விடத்தில் பிந்தி யுண்டான ஊருக்கு தேவிபுரம் என்கிற பேருண்டாகி வழங்கிவரலாயிற்று. அந்த வூர் இன்றைக்குமிருக்கிறது. ஸ்வாமியையும் அம்மனையும் கோயிலி லெழுந்தருளியிருக்கவிட்டு, இங்கு நித்தியப்படி பூஜைசெய்துவரும் பிராமணருடன் அவர்வீட்டுக்குச் சற்றுப்போய்வருவோம். அந்த வீட்டினுள் நுழைந்தால் ஆணும் பெண்ணும் பாலரும் விருத்தருமாக அனேகர் கூடியிருக்கக்காணலாம். அதோ தெரிகிறது பார், அதுதான் மாரியம்மன்கூடம்; அதற்கெதிரேயிருக்கும் அறை பூஜையறை; அதையெல்லாரும் 'மாரியம்மன் உள்' என்று அழைப்பது வழக்கம். அந்த உள்ளே வெள்ளிக்கிழமைதோறும் மாரியம்மனுக்கு விளக்குப்போடுகிறது வழக்கம். இந்த வெள்ளிக்கிழமை கூட்டம் அதிகமாயிருக்கிறது. ஏனென்றால் மாரியம்மன் மருள் வந்து குறிசொல்லும் கைக்கோள்வன் வந்திருக்கிறான். எல்லாரும் குறி கேட்கவந்து கூடியிருக்கிறார்கள். பிராமணாள் வீட்டில் மாரியம்மன் பூஜையென்றால் ஆடு கோழிவிட்டு ஆபாஸபூஜை நடத்துவதாக அறியாச்சிலர் அனுமானித்துக்கொள்ளலாம். அவர்கள் அனுமானத்துக் கிடங்கொடுக்க நிமித்தமில்லை. இங்கு இரகசியம் ஒன்றுமில்லை. எல்லாரும் வந்துபார்க்கலாம். அதோ பாருங்கள் அந்த உள்ளே குத்துவிளக்கொன்று ஏற்றிவைக்கப்பட்டிருக்கிறது.

அதைப் புஷ்பத்தால் அலங்கரித்து அதன்பக்கத்தில் ஒரு தட்டில் பாக்கு வெற்றிலை பழமும், ஒரு பாத்திரத்தில் பானகமும் (வெல்லம்கரைத்த தண்ணீர்) நிவேதனமாக வைத்திருக்கிறது. தூபக்காலில் சாம்பிராணிப் புகை கிளம்பிக்கொண்டிருக்கிறது பாருங்கள். அதோ சூடம் கொளுத்துகிறார்கள். அது தான் தீபாராதனை. மாரியம்மன் அந்த தீபத்தில் ஆவாகனமாய்விட்டாள். மாரியம்மையுபாஸகனை கைக்கோள்வன் அவளை ஸ்தோத்திரம்செய்து பாடுகிறான். அவன் ஏதேதோ முணுமுணென்று வாய்க்குள் சொல்லிக் கொள்கிறான். இடை இடையே வாயைப் பிளந்து கொட்டாவிவிடுகிறான். அவன் கண்ணில் ஒருவித கலக்கம் தோற்றுகிறது பார். ஆள் மயக்கங் கொள்கிறான். வரவரத் தன்னை மறந்துபோகிறான். மாரியம்மனைத் தோத்திரஞ்செய்துவருமவன் தன்னை மறக்கவும் தான் மாரியம்மனேயாய்விட்டதாக மருள் கொள்கிறான்.

"சந்ததமும் வேதமொழி யாதொன்றுபற்றினது
தான்வந்து முற்றுமெனலால்"

என்று சொல்லியிருக்கிறபடி, சதாகாலமும் யாதொன்றையாயினும் மனத்தினால் பற்றினால் அதுவாகவே வந்து முடிவுபெறுமென்பது வேதவாக்கியம்; அனுபவத்திலு மது உண்மையேயென்று எல்லாரும் அறிந்துகொள்ளலாம். ஆகையால் மாரியம்மையுபாஸகன் அவளைத் தியானித்தால் திரிகாலத்தும் நடக்கும் விஷயங்களை யுணர்ந்து குறி சொல்லலாமென்று நம்பி அவளையே தியானம்செய்து வருகிறான். மனதின் இயற்கை விதிப்படி அவன் தன்னை மறந்தகாலத்தில் தன்மயத்துவமடைந்து தான் உபாஸித்த சக்தியை தற்காலத்துக்கு அனுபவஸித்தியாகப் பெறுகிறான்.

"தெருளாகி மருளாகியுழலு மனமாய் மனஞ்
சேர்ந்து வளர்சித்தாகி" . . . .

என்றதனால் மனோவிர்த்தியும், மனோலயமானவிடத்தில் சித்தவிர்த்தியும், இப்படி முறையே படிப்படியாக ஒன்று லயமானவிடத்தில் அதற்கு மேற்பட்ட ஒன்று விளங்கி விர்த்தியாக இவையெல்லாம் ஒன்றொன்றாக நசித்தவிடத்து அருள்தோன்றி அவ்வருளால் பரம்பொருளைக் காண்கிறாரென்று மேலோர் எடுத்துக் காட்டியிருக்கிறார்கள். ஆகையால் இவன் ஏதோ பாசாங்கு செய்கிறானென்று எண்ணவேண்டாம். அவனுக்கு மாரியம்மன் வருவதை "மருள்" என்றே அவனும் சொல்கிறான். இந்த மயக்கம் மானசதத்துவத்துக்கு ஒத்துள்ளதே யன்றி விபரீதமானதல்ல. ஆகையால் இக்கோலாகலத்தைக்கண்டு கற்றுத்தேர்ந்தவர்கள் முகத்தைச் சுளுக்கிக் கொண்டு போகாமல் கூடவிருந்து அதன் தத்துவத்தை உள்ளோர்ந்து, வெளியில் நடப்பதை வேடிக்கை பார்த்திருக்கலாம். அதில் குற்றமில்லை; அவர்கள் படிப்பு கௌரவத்துக்குக் குறைவுமில்லை. குறிசொல்வோன் கொட்டாவிவிட்டு மருள்முற்றி தன்னை மறந்து முணுமுணுவென்று சொல்லிய வாய்மொழி சப்தமேறத் தீர்க்கங்கூடி,

"கொட்டாங்கச்சிக்கூழுக்குக்
குறம்பாட வந்தவள்நான்
மாரியம்மத்தாயி . . . ."

என்று சொல்லி உடம்புசிலிர்த்து மயிர்க்குச்செடுக்க அவன் நெட்டுக்குத்தாய் நிமிர்ந்து நின்று கர்ச்சிக்க, மாரியம்மன் வந்துவிட்டாள் என்று எல்லாரும் அறிந்துகொள்ளலானார்கள்.

இதுவரையில் "எப்பாக்குவைத்தாற்போல் குந்தியிருந்த கும்பலில் என்ன சலனம் பார். பெண்கள் நான், நீ, யென்று, முன்விழுந்து குறிகேட்கப் பரபரப்பாயிருக்கிறார்கள். இருந்தாலும் ஒழுங்கு தப்பவில்லை. கல்லவில்லை குழப்பமில்லை. அம்மன் வந்திருக்கிறாளென்கிற பயபக்தி எல்லாருள்ளத்துமிருந்து அவர்களை நிதானமாக நடக்கச்செய்கிறது. அதோ ஒரு மாது அவளுடைய பூர்வ ஜன்மத்தைப் பற்றித் தெரிந்துகொள்ள விரும்புகிறாள் பார். கிழவியொருத்தி தன் அடுத்தஜன்மத்தைப்பற்றித் தெரிந்துகொள்ள ஆவலாயிருக்கிறாள்.

மற்றொருத்தி தனக்குப் புத்திரசந்ததி யுண்டாகுமாவென்று கேட்கிறாள். வேறொருத்தி தன் கணவன்நோவு தீருமாவென்று கேட்கிறாள். இவர்கள் கேள்விகளுக்குத் தக்கபடி அவனும் யுக்தமாயும் நுட்பமாயும் பதிலளித்துவருகிறான். இதோ ஒரு கிழவி "எங்கக்காள் இறந்து வெகுகாலமாயிற்றே, எங்கு பிறந்திருக்கிறாள்?" என்று பரபரப்பாய்க் கேள்வி கேட்க, குறிசொல்வோன் சிறிது படபடத்து "அக்காள், அக்காள் என்று அலறுகின்றையே! பக்கத்தி லுட்கார்ந்திருக்கிறாள் பாரேன்—தெரியவில்லையா—அதோ விருக்கே அந்தக் குழந்தைதான் உங்கக்காள். இனிப்பறக்காதே" யென்று சொல்லி அவளுக்குப் பக்கத்திலுட்கார்ந்து அவள் மடிமீது சாய்ந்து 'செல்வ அழுகை' அழுதுகொண்டிருந்த 5-வயதாகாத ஒரு பெண் குழந்தையைச் சுட்டிக்காட்டிச் சும்மாவிருந்தான். சிறிது நேரத்திற்கெல்லாம் அவன் மருள் நீங்கி மனத்தெளிவுற்று எப்போதும்போல் பேசலுற்றான். அவன் அச்குழந்தையைச் சுட்டிக்காட்டினதுமுதல் அங்கிருந்த எல்லாருடைய கண்ணுங் கருத்தும் அப்பெண் குழந்தையின் மேற் சென்றுவிட்டது. எல்லாரும் அக்குழந்தையை உற்று உற்றுப்பார்த்துப் பையப்பைய விழித்தார்கள். ஒருத்தி "அவள் முகச்சாயை இக்குழந்தை முகத்தில் தெரிகிறது பாரடி" யென்றாள். மற்றொருத்தி "அவளுக்கிருந்த முகத்தழகெல்லாம் இக்குழந்தையின் அகத்தில் இப்பொழுதே விளங்குகிறது பாரேன்" என்றாள். குறிகேட்ட கிழவி உடனே நடுவில் புகுந்து "முகத்தழகிலும் அகத்தழகுதான் மேலம்மா, மேலழகுபொருந்திப் பிறந்து பூர்வஜன்மத்தில் படாதபாடும் பட்டாளே. அந்த ஞாபக மிருக்குமோ இல்லையோ, அதுதான் அகத்தழகோடு பிறந்திருக்கிறாள். எப்படியாகிலும் அவள் இந்த ஜன்மத்திலாவது கஷ்டங்கள் ஒன்று மனுபவிக்காமல் எங்கம்மாளைப் போல் ஆனந்தமாயிருந்து சந்தோஷமாக அவள் காலத்தைத் தள்ளிவிட்டுப் போகட்டும் அம்மா போதும். பெரியநாயகி, கனககிரீசுவரா, இந்தக்குழந்தை யுங்களதுதான். நீங்கள்தான் அவளைக் காப்பாற்றிக் கடைத்தேறவைக்கவேண்டும்" என்று மனமுருகி பக்தியினால் அன்புபூரிக்க ஹிருதயபூர்வகமாய் ஸ்வாமியைப் பிரார்த்தித்து அக்குழந்தையை ஆசீர்வதித்தாள்.

இப்படி ஆசீர்வதித்தவள் அக்குழந்தையின் பாட்டியார். அவள் தமக்கையொருத்தி மிக ரூபலாவண்யமுள்ளவளாயிருந்து, அதுகாரணமாய் அவளுடைய வயதுசென்ற கணவனது பொறாமைக்காளாகிப் பல நிர்ப்பந்தங்களுக்குட்பட்டுக் கடைசியில் அகாலமரணமாக மாய்ந்தாளென்பது அவளுடைய எண்ணம். அவளிறந்ததுமுதல் பிரிவாற்றாமல் பெருந்துயருற்று வெகுகாலமாக அவள் எங்கே மறுஜன்மமெடுத்திருக்கிறாளென்று அக்குறிசொல்வோன் மூலமா யறிந்துகொள்ள விரும்பி அவனை அடிக்கடி இந்த ஒரு கேள்வியே கேட்டுவந்ததாகத் தெரிகிறது. இதற்குமுன் கேட்டபொழுதெல்லாம் அவன் "இறந்தவள் இன்னும் அசரீரியாகவே யிருக்கிறாள்; மறுதேகமெடுக்கவில்லை" யென்று சொல்லிவந்தான். இந்த அம்மை தன் தமக்கையினிடத்து மிகப் பிரீதியுடையவளாதலால் அவள் தன்னருகில் தன் வமிசத்திலே மறுஜன்ம மெடுக்கவேண்டுமென்று விடாமல் கடவுளைப் பிரார்த்தித்துக் கொண்டுவந்தாள். வயதுசென்ற கிழவியாகவும் அவளுக்குத் தன் தமக்கை மறுதேகமெடுத்திருப்பதை யறிந்து பார்க்காமற்போவது பெருங் குறையாக விருந்தது. ஆகையாற்றான் சகிப்புற்றுப் பொறுக்காமல் பரபரப்போடு மறுபடியும் தன் பழைய கேள்வியையே கேட்டாள். இந்தவிசை அக்குழந்தை கிட்டவிருந்தது எல்லோருக்கும் நல்லதாகவே முடிந்தது.

இதை வாசிக்கும் புத்திசாலிகள் இக்கைக்கோள்வன் குறியை நம்பினாலும் சரி நம்பாவிட்டாலும் சரி, நமது பாட்டியம்மாளுக்கு

அதில் சிறிதுகூடச் சந்தேகமில்லை. தன் தமக்கை தனது மகள்வயிற்றிலேவந்து பிறந்து, அந்த மகளும் தன்னுடன்கூடவே யிருக்கும் படி நேர்ந்தது தன்னுடைய பிரார்த்தனைக் கிணங்கி கடவுளாக்கினையா லுண்டான சம்பவமேயன்றி மற்றப்படியன்று என்பது அவள் மனதில் ஆணித்திறமாய் ஏறின நம்பிக்கை யாய்விட்டது. அதுமுதல் அக்குழந்தையிடத்து முன்னிலும் பதின்மடங்கதிகமா யன்பு பாராட்டி எப்போதும் அவள்மேல் கண்ணுங் கருத்துமா யிருந்தாள். அவள்மேல் தூசிபறந்தால், தன் கண்ணில் தூசிவிழுந்தது போல் சங்கடப்படுவாள். அவள் முகங்கோணப் பார்க்கச் சகியாள். அவளைப் பேரைச் சொல்லிக் கூப்பிட்டாலும் குறைநேருமென்று தேனே, கற்கண்டே, சர்க்கரையே யென்று செல்வப் பேரிட்டழைத்திடுவாள். அக்குழந்தையை யெடுத்தணைத்து ஒரு கன்னத்தில் ஒரு முத்தமிடுவாள், "ஆஹா! தித்திக்கிறதடா, என் கற்கண்டு" என்பாள். மறுகன்னத்தில் ஒரு முத்தமிடுவாள், "ஆஹா! தேன்கட்டி" யென்பாள். நெத்தியிலொரு முத்தங்கொடுப்பாள், "என்சர்க்கரை" யென்பாள். இப்படிச் சீராட்டிப் பாராட்டி அக்குழந்தையை வெகு செல்வமாய் வளர்த்துவந்தாள். அதன்மேல் காற்றுப்படப் பொறுக்காள். அவள் தகப்பனும் அப்படியே; அவள் பெரியதாயார் எல்லாரையும் விட அதிகமாக அவளை யெடுத்துக் கொண்டாடுவாள். இப்படி எல்லாரும் சீராட்டிப் பாராட்டச் செல்வமாய் வளர்ந்த குழந்தை எங்குபார்த்தாலும் அன்பு மிகுதியாயிருந்ததால், பெற்றதாய், எடுத்ததாய், வளர்த்ததாய் என்கிற பேதம்தெரியாமல் எல்லாருக்கும் செல்வமாய் வளர்ந்துவந்தாள்.

"அன்புநிலையறிந்துகொண்ட அற்புதத்தாயவளும்
அழகானபாலனுய்வந் தவசரமாயவதரித்தாள்.
அவதரித்ததாயாரின் உருவத்தைவடிவத்தை
என்னென்றியம்புவேன் எப்படித்தீட்டுவேன்நான்.

"ஐந்துவயதாகாத அருமைக்குழந்தையாய்
அவதரித்துவந்துஅவள் அழுதாள்காண்என்றன்மடி
மேல்
அன்புருவேயான அவள் அழுத அழுகையது
என்புருகச் செய்ததென்னை."— என்றது.

கைக்கோளன் குறிசொன்னபோது பாட்டி வாலம்மாள் மனோபாவத்துக்கு முற்றும் பொருந்தினதா யிருந்தது.

இப்படியிருக்க 7-வது வயதில் அவளைப்பெற்றதாய் பரலோகமடைந்தாள். பெற்றதாயை யிழந்தும், இழந்தது தெரியாமல் அக்குழந்தை வளர்ந்துவந்ததனால் பின்பு தன் தாய்முக மிப்படியென்பதையும் மறந்துவிட்டாள். அன்பிலேபிறந்து அன்பிலேவளர்ந்துவந்த அக்குழந்தைக்கு எங்குபார்த்தாலும் தாயன்பு மிகுதியாயிருந்தபடியால் தாய் போனதே யொரு குறையாகத் தோற்ற ஹேதுவின்றிப் போய்விட்டது. அன்புள்ள இடமே தாய்ஸ்தானமாதலால், முதலில் தன் பாட்டியாரையே தாயாக மதித்துவந்து, பிறகு தன்னை யாதரித்துவளர்த்த பெரியதாயாரை அந்தஸ்தானத்தில்வைத்து ஆனந்தமாய் வளர்ந்துவந்தாள். அக்குழந்தையின் குணமறிந்துதான் பேரிட்டார்களோ, அல்லது அக்குழந்தைதான் அதற்கிட்ட பேர் பொருந்தக் குணம் காட்டிற்றோ தெரியாது. அக்குழந்தைக்கு உள்ளும்புறமும் ஒத்திருந்ததுபோலவே, பேரும் குணமும் பொருந்தியிருந்ததுமட்டும் உண்மையென்று தெரியும். குழந்தையானாலும் குணக்கேடு ஒன்றும் அதனிடத்தில்லை. ஆகாத்தியம், பிடிவாதம் முதலிய குழந்தைகளுக்குள்ள குற்றங்கள் அதனிடத்தில் இயல்பாகவே யில்லாமலிருந்தது. சாந்தமும் சந்தோஷமும் அக்குழந்தையினிடம் குடியிருப்பா யிருந்தன. ஜனன முதல் மரணபரியந்தம் கூடவிருந்து வளர்த்த அம்மை அக்குழந்தை துஷ்டத்தனம் செய்ததென்று சொல்ல ஒருதாரணமாவது தன் ஞாபகத்தில் படவில்லையென்று சொன்னாள். அழாத குழந்தை யுலகத்திலுண்டா? தின்பண்டத்துக்காவது அழுததில்லையாவென்று கேட்டதற்கு, அக்குழந்தையின் தாயார் இறந்துபோனபொழுது துக்கப்பெருக்கத்தால் அக்குழந்தைக்கு

அன்னம்படைக்கையில் வழக்கமாக வைக்கிற நெய்விழுது வைக்க மறந்துபோக, அக்குழந்தை ஒன்றும் சொல்லா தழுதுகொண்டிருக்கக்கண்ட பெரியதாயார் "ஏனடியம்மா அழுகிருய்," என்று கேட்டபொழுது, நெய்விழுது வைக்கவில்லையென்று அழுவதாகச் சொல்லிற்ரும். இதைவிடப் பெரிதான குற்றம் சொல்ல அந்த அம்மாளை அலட்டி அலட்டிப் பல கேள்விகள்கேட்டும் பயனின்றிப் போய்விட்டதொன்றுமட்டும் நாமறிவோம். குழந்தைகளுக்குரிய குற்றங்களொன்று மில்லாததோடு பாலர்க் கலங்காரமாகும் பல சற்குணங்கள் அவளிடத்து ஆதிமுதல் விளங்கிவந்தன. எல்லாரிடத்தும் அன்பு பாராட்டல், எல்லாரையும் சமமாகப் பாராட்டல், இரக்கமுடைமை, ஈகைக்குணம், சாதுத்தன்மை இவை குழந்தைப்பருவமுதல் விசேஷமாக விளங்கிவந்ததற்குப் பல உதாரணங்கள் சொல்லக் கேட்டதுண்டு. பள்ளியில் படிக்கையில் தன்னொத்த பிள்ளைகளிடத்தில் அதிக வாஞ்சையுடையவளாக விருந்ததற்கு அநேக உதாரணங்கள் சொல்லலாம். எப்பொழுதும் பிறர் சந்தோஷிக்கப்பார்த்துத் தான் சந்தோஷிக்கும் குணம் விசேஷமாயிருந்தது. கையில் என்ன அகப்பட்டாலும் பிறர்க்குப் பகிர்ந்துகொடுத்துண்பதிலுள்ள சந்தோஷம், அதைத் தான் மட்டும் தனியேவைத்துண்பதில் சிறிதுமில்லை. ஆடை யாபரணங்களணியக் கிடைத்தாலும் உடன்தோழிகள் முகம்வாடத் தான் எதையும் பூணுவதில் சந்தோஷப்படாள். தான் அலங்கரித்துக்கொண்டிருப்பதைப்பார்த்துப் பக்கத்து வீட்டுக் குழந்தையொன்று தனக்கு அவ்வலங்காரம்செய்துகொள்வதற்கில்லையேயென்று வருத்தப்பட்டால், உடனே தனக்குள்ள புஷ்பம், பணி, பூண் முதலியனவற்றை அவளுக்கணிந்து அவள் சந்தோஷிப்பதைப்பார்த்துத் தான் சந்தோஷிப்பாளேயன்றி, அவள் வருத்தப்படத், தான் அலங்காரம்செய்துகொண்டு சந்தோஷியாள். அன்புக்குக் கட்டுப்பட்டிருந்ததுபோலவே அடிக்குப் பயந்திருப்பாள். பள்ளிப்பிள்ளைகளை யாரையாவது வாத்தியாரடித்தால் அந்த அடி தன்மேல் விழுவது போல் நினைத்து நடுங்குவாள். சண்டை சச்சரவுகளில் சிறிதும் பிரியமின்றி எப்போதும் சமாதானம் செய்ய சமயம் எங்கே எங்கே என்று காத்திருப்பாள். யாரும் தன்னோடு கோபித்திருக்கச் சகியாள். யாராகிலும் தன்னிடத்தில் குற்றமில்லாமலிருக்கக் கோபித்திருந்தால், தன்னிடத்தி லில்லாக் குற்றத்தை இருப்பதாக ஒத்துக்கொண்டாவது அவளைச் சமாதானப்படுத்தக்கூடுமோனல் அப்படியே செய்து நேசமாயிருக்கப் பார்ப்பாள். இப்படியாக உருக்கிவார்த்த பொன்போல் உள்ளம் மாசுபடியாது, அன்பாதரவிலே அகமகிழ்வெய்தி உள்ளும்புறமும் ஒக்க வஞ்சகமென்கிற வாசனையும் தீண்டாது வாலைப்பருவங்கழிய வளர்ந்துவந்தாள்.

ஸத்தியசந்தன்.

---

## இருவித சுவாசங்கள்.

சுவாசங்களில் இருவிதங்கள் இருக்கின்றன. அவற்றுள் ஒன்று உச்சுவாசம்; அதாவது உள்ளே வாங்கும் மூச்சு. மற்றொன்று நிச்சுவாசம்: அதாவது வெளியே விடும் மூச்சு. இவ்விரண்டுள்ளும் பேதமென்ன இருக்கின்றது என்று சிலர் கருதலாம். ஆனல் அது அப்படியல்ல. சற்று நிதானித்துப்பார்த்தால் அதன் உண்மை நன்குவிளங்கும். உச்சுவாச நிச்சுவாசங்கள் ஒரு திறத்தனவல்ல. அவற்றின் காரணப்பொருள்களும் வெவ்வேறு திறத்தன. உச்சுவாசம் ஆக்கப்பட்டிருக்கும் காரணப்பொருள்கள் வேறு. நிச்சுவாசம் ஆக்கப்பட்டிருக்கும் காரணப்பொருள்கள் வேறு.

அவற்றின் பலன்களும் அப்படியே. நற்காற்றைச் சுவாசிப்போர் நன்றாக வளர்ந்து சுகதேகிகளாகவும் தெளிவான புத்தியுடையவர்களாகவும் இருப்பார்கள். தாமே சுவாசித்த அல்லது மற்றப் பிராணிகள் சுவாசித்த நிச்சுவாசக்காற்றை வழக்கமாக உச்சுவாசம் புரிவோர் வளர்வதரிது. அப்படி வளர்ந்தாலும் மெலிவாயும் உடல் வெளுத்தும் உறுதியும் உற்சாகமும் அற்று இருப்பார்கள்.

உச்சுவாசத்துக்கும் நிச்சுவாசத்துக்கும் உள்ள வித்தியாசத்தை அறியவேண்டுமானல் அதற்காக அதிக பிரயாசைப்படவேண்டுவதில்லை. ஒரு சிறு எலியைப்பிடித்துச் சந்தில்லாத ஒரு பெட்டியினுள் அடைத்துவிட்டு நீங்கள் வெளியேயுள்ள சுத்தமான காற்றைச் சுவாசித்து உங்கள் நிச்சுவாசத்தை ஒரு குழாய்வழியா அப்பெட்டியினுள் விட்டுவந்தால் அந்தப்பிராணி சிறிதுநேரத்திற்கெல்லாம் மயக்கமடைவதைக் காண்பீர்கள். பின்னும் சில நேரம் நீங்கள் அப்படியே செய்துவந்தால் அது இறந்தேபோகவும் காண்பீர்கள்.

இன்னும் ஒரு உதாரணம் பாருங்கள். இது இதைப்படிப்பவர்களுள் தாய்மார்களாக இருப்பவர்கள் அவசியம் கவனிக்கத்தக்கது. குழந்தைகள் உறங்கும்போது உள்ளங்கால் முதல் உச்சந்தலைவரைத் துப்பட்டியால் நன்றாகச் சந்து பொந்தில்லாமல் போர்த்துக்கொண்டுறங்குமாறு அப்பியாசப்படுத்திவிட்டால் அக்குழந்தைகள் தாங்கள் நிச்சுவாசித்த காற்றையே மீண்டும் உச்சுவாசமும் செய்து உடல் வெளுத்தும் மெலிந்தும் ரோகங்களோடு கூடியும் இருக்கும் என்பது நிச்சயம். முன்னே சுகதேகிகளாக இருந்த எத்தனையோ குழந்தைகள் இவ்வழக்கத்தை மேற்கொண்டபின் பலவித ரோகங்களுக்கு உட்பட்டு வருந்திப் பின் இவ்வழக்கத்தைவிட்டுக் குணப்பட்டிருக்கின்றன. இன்னொருவிஷயம் பாருங்கள். அநேக ஜனங்கள் கூடிய ஒரு அறையில் உள்ள கதவு ஜன்னல்கள் ஆகிய எல்லாவற்றையும் அடைத்துவிட்டு நாம் விளக்கு முதலியவற்றோடு நெடுநேரம் இருந்தால் நமக்குத்தலைவலியும் ஒருவித மயக்கமும் உண்டாகிறதல்லவா? இந்தமயக்கத்துக்குக்காரணம் என்ன? முன்சொல்லிய பெட்டியிலிருந்த எலியின் மயக்கத்துக்கிருந்த காரணம்தான் அது. அதாவது நாமும் பிறரும் நிச்சுவாசித்த காற்றையே மீண்டும் மீண்டும் உச்சுவாசித்ததுதான் காரணம், அறையில் இருந்த சுத்தமான காற்றெல்லாம் அதனுள் இருந்தவர்களால் சுவாசிக்கப்பட்டுக் கெட்டுப்போயின. இந்தக் காற்றைக் கெடுப்பதில் விளக்குகளும் துணைபுரிந்தன. அதைப் பின்பு விளக்குவோம். நிச்சுவாசம் நிறைந்த அறையில் விளக்குகளும் நில்லா. அது விஷயத்தில் சந்தேகமே கிடையாது. மேலே காட்டியபடி பெட்டியினுள் எலியை அடைத்துப் பரீக்ஷிப்பதற்குப் பிரதியாக ஒரு எரிந்துகொண்டிருக்கும் மெழுகுவர்த்தியை வைத்து முன்போல ஒரு குழாய் வழியாக எவ்வளவோ மெதுவாகவாயினும் நிச்சுவாசக் காற்றைச் செலுத்தினல் அவ்வர்த்தி சில நேரத்துக்கெல்லாம் அவிந்துபோகும்.

சரி இது எப்படி ஆகின்றது? உச்சுவாச நிச்சுவசங்களுள் பேதமென்ன? பிராணிகள் விஷயத்திலும் எரிகின்ற வர்த்திகளின் விஷயத்திலும் அவை ஒரே திறத்தனவாக இருப்பதேன்? அதுதான் இனி நமது ஆராய்ச்சிக்கு விஷயமாக இருப்பது.

(இன்னும் வரும்.)

தீ. சி. பிள்ளை.

# தோத்திரங்கள்—IN PRAISE OF GOD.

கடவுள்வாழ்த்து.

நமச்சிவாய வாஅழ்க! நாதன்றள்வாழ்க!
இமைப்பொழுதும் என்னெஞ்சி னீங்காதான்றள்வாழ்க!
கோகழிஆண்ட குருமணிதன் றள்வாழ்க!
ஆகமம் ஆகிநின்ற அண்ணிப்பான்றள் வாழ்க!
ஏகன் அநேகன் இறைவன் அடிவாழ்க!

---

மாசற்ற சோதி மலர்ந்த மலர்ச்சுடரே!
தேசனே! தேனார் அமுதே! சிவபுரனே!
பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கும் ஆரியனே!
நேச அருள்புரிந்து நெஞ்சில் வஞ்சங்கெடப்
பேராது நின்ற பெருங்கருணைப்பேராறே!
ஆரா அமுதே! அளவிலாப் பெம்மானே!
ஓராதாருள்ளத் தொளிக்கு மொளியானே!
நீராய் உருக்கி என் னாருயிராய் நின்றானே!
இன்பமுந்துன்பமுமில்லானே, உள்ளானே!
அன்பருக்கன்பனே! யாவையுமாய் அல்லையுமாஞ்
சோதியனே! துன்னிருளே! தோன்றாப் பெருமையனே!
ஆதியனே! அந்த நடுவாகி அல்லானே!
ஈர்த்தென்னை யாட்கொண்ட வெந்தை பெருமானே!
கூர்த்தமெய்ஞ்ஞானத்தாற் கொண்டுணர்வார் தங்கருத்தின்
நோக்கரிய நோக்கே! நுணுக்கரியநுண்ணுணர்வே!
போக்கும்வரவும் புணர்வுமிலாப் புண்ணியனே!
காக்குமெங் காவலனே! காண்பரிய பேரொளியே
ஆற்றின்ப வெள்ளமே! அத்தா! மிக்காய் நின்ற
தோற்றச் சுடரொளியாய்ச், சொல்லாத நுண்ணுணர்வாய்,
மாற்றமாம் வையகத்தின் வெவ்வேறே வந்தறிவாந்
தேற்றனே! தேற்றத் தெளிவே! என் சிந்தனையுள்
ஊற்றான உண்ணாரமுதே! உடையானே!

---

உடையானே நின்றனைஉள்கி உள்ளம்உருகும்பெருங்காதல்
உடையார்உடையாய்! நின்பாதஞ்சேரக்கண்டிங்கூர்நாயின்
கடையானேனெஞ்சுருகாதேன்; கல்லாமனத்தேன்கசியாதேன்;
முடைஆர் புழுக்கூடிது காத்திங்கிருப்பதாகமுடித்தாயே!

SHORT STORY.

## கமலாபாய்.

"பொருளல்லவரைப் பொருளாகச்செய்யும்
பொருளல்லதில்லை பொருள்."—திருக்குறள்.

அது ஓர் ஏழைக்குடும்பம், அதில் தரித்திரம் அதிகரிக்கத் தகுந்தவளவு பிரஜாவுற்பத்தி அதிகப்பட்டு கோரமான வருத்தத்தையும் சங்கடத்தையு முண்டாக்குவது சகஜந்தானே. அதற்கு குசேலசரித்திரத்தைவிட வேறு திருஷ்டாந்தமும் வேண்டுமோ? அனேகமாய் பெண்களுக்கு, பிறந்தவீட்டில் விசேஷ சொம்பும் தெம்பும் நிறைந்திருந்தபோதிலும், புகுந்தவீட்டில் அஃதில்லாவிட்டால் சிறப்பும் சீரும் விசேஷமாயிராதென்பது திண்ணமன்றோ? நமது கதாநாயகி கமலாபாய் பிறந்தவிடமாகிய முன்னூற்றுமங்கலத்திலுள்ள அநேக தென்னை, மா, கமுகு முதலிய தோப்புக்களுக்கும், நஞ்சை புஞ்சை பூமிகளுக்கும் சொந்தக்காரர் நமது கமலாபாயின் தந்தை ஹரிராயர். இவர் வடதேசத்திலிருந்து வந்த கர்னுடகப் பிராம்மணரெனப் புலப்படுகிறது. இவர்காலத்தி லரசாண்ட இராஜ சிரேஷ்டர்களுக்கு தன் வேலைத்திறமையினுல் திருப்தியையுண்டுபண்ணி அநேக பூமிகளை சர்வமானியமாகப் பெற்றவர். அவ்வூரில் 365 - அந்தணர்களுடைய கிரகங்களுண்டென்றும், இவர்கள் ஹக்கிரபூமி என்னப்பட்ட விடத்தில் தங்களை நாடிவந்த சிவமூர்த்தி என்ற புராணவிப்பிர சிரேஷ்டருடைய வாக்கினுல் கேட்ட சத்சரிதைகளுக்கு பிரதிபலன் கொடாமல் தூஷித்துத் துரத்திவிடவே, அவர் தேசாதிபதியிடம் அவர்கள் வஞ்சனையையும், அக்கிரமத்தையும் முறையிட, இராஜனும் அவர்களை கடுமையாய்த் தண்டித்ததாகவும், பிறகு ஜகதீசன் கட்டளைப்படி இவர்கள் சகர சக்கரவர்த்திக்கு அறுபதினுயிரம் பிள்ளைகளாய் க்ஷத்திரியவம்சத்தில் பிறந்து, கபிலர் சாபத்தால் சாம்பலாய், பகிரதனுடைய முயற்சியால் இப்பூமியில் வந்த கங்காநதியினுல் விமோசனமடைந்து, முன்னூற்று மங்கலத்தில் பிராமண குலத்தி லுதிக்கவும், புராணிகர் அடுத்த மலையில் பகாசூரனுக உற்பவிக்கவும், முன்வினையினுல் அவர்கள் தினப்படி அவ்வசுரனுக்கு சில வண்டிகள் நிறைய அன்னமும், அதற்குத்தக்க காய்கறிகளும், தயிர், நெய், பலகாரங்களும், ஒரு மனிதனும் ஆகாரமாக அனுப்பிக்கொண்டேவர ஏற்பட்டதாகவும், பிறகு அவ்வசுரன் பீமனுல் சம்ஹாரம் செய்யப்பட்டதாகவும், இராமாயண காலக்ஷேபத்தின் பலனுய் அவன் பின்பு பரீக்ஷித்து மகாராஜனுய்ப் பிறந்ததாகவும், சிற்சில கிரந்தங்களால் தெரியவருகிறது. நமது ஹரிராயர் இராஜாங்கத்தாரால் வடதேசத்திலிருந்து வரவழைக்கப்பட்டவராதலால் பகாசூரனுக்கு விருந்தளிக்க ஏற்பட்டவர்களில் உட்படவில்லை. இந்நகரையடுத்து பவானி நதி எக்காலத்திலும் வற்ருமல் ஓடிக்கொண்டிருந்தபடியால், விசேஷ நிலவளம் நீர்வளம் பொருந்தி கண்ணுக்கெட்டிய தூரம் தெங்கு, மா, கொய்யா முதலிய பழ மரங்களாலும் பயிர் பச்சைகளாலும் நிறைந்து, வனமிருகங்களும் பக்ஷிஜாதிகளும் மலிந்து, ரமணியமாயிருந்ததாகத் தெரியவருகிறது. யானைத் தந்தங்களும் மான்கொம்புகளும் காடுகளில் எரிகரும்புக்காகச் செல்கிறவர்களுக்கு சர்வ சாதாரணமாய் அகப்படுகிறதுண்டென்றும், சில தந்தங்கள் எடுப்பாரின்றி மண்ணுக்கிறையாமென்றும் கூறப்படுகிறது. இந்நகருக்கு சந்திரசேகரபுரம் என ஒரு நாமமுமுண்டு. இராயர் காலத்திற்குப்பிறகு அவர் குமாரன் நாகோஜிராவ் தந்தையின் சகல சொத்துக்களுக்கும் பாத்தியஸ்தனுய், தான் இலக்ஷ்மி புத்திரன் என்பதை வெளிஜனங்களுக்குக் காட்ட, தனக்கும் தன் குழந்தைகளுக்கும் சமுசாரத்திற்கும், உள்ளங்கால் முதல் உச்சந் தலைவரையில் பொன்னுபரணங்களையும் கல் நகைகளையும் செய்து பூண்டு, பட்டாடைகளையும் ஜரிகைவஸ்திரங்களையுமன்றி மற்றத் துணிகளையணியாமல், அலங்கரித்துக்கொண்டு

வெகு கம்பீரமாய் யாரையும் லக்ஷியஞ்செய்யாமல் ஈவிரக்கமின்றி, தன் தந்தையை யடுத்துப் பிழைத்து வாழ்ந்துவந்த சுற்றத்தாரையும் பந்துக்களேயும் நீக்கினதுமன்றி, தன் ஒரே சகோதரியும், நமது கதாமணியுமாகிய கமலாபாயையும் புக்ககத்திற்குப் போகும்படி யனுப்பிவிட்டனர்.

கமலமோ பிறந்தநாள்முதல் விவாகமாகிற வரையிலும், விவாகமான பின்பும் புருஷனுடன் தாய்வீட்டிலேயே வாழ்ந்து யாதொரு கவலேயும் கிலேசமுமின்றி இருபத்திரண்டு வயதிற்குள்ளேயே நான்கு குழந்தைகளேப் பெற்று மகோன்னத தசையிலிருந்தவளான படியால் வறுமை என்பதையும், கஷ்டமென்பதையும் அறியாள். இவள் தகப்பன் ஜீவந்தராயிருக்குங்காலத்தில், இவள் ஏதோ காரியார்த்தமாய் வெளியேபோனல், தந்தை உடனே இவளே 'கமலா வெயிலில் போகாதே உன் முகம் வாடுவதை நான் சகியேன்' என்று கூவியழைத்து பக்கத்தி லுட்காரவைத்துக் கொண்டு இன்சொல் கூறுவார். பெயருக்குத் தக்க வழகும் குணமு மமைந்து கற்புக்கரசியாய் விளங்கினவளே பச்சாதாபமின்றி சகல ஆடையாபரணங்களேயும் கவர்ந்துக்கொண்டு தமயன் துரத்திவிட்டபடியால், குழந்தைகளுடன் புருஷனேயும் கூட்டிக்கொண்டு கால்நடையாகப் புக்ககம் சேர்ந்தனள்.

சங்கர்ஜி எனப் பெயர்வாய்ந்த புருஷனே மாமனர் வீட்டுச் சொத்தை நம்பி கணபதிபுரமென்ற ஊரினுள்ள தன் வீடுவாசல் பூமி காணிமுதலியவைகளே அலக்ஷியஞ்செய்து, சிறுவயதிலேயே மாமனர் வீடுசேர்ந்து அகவிலேயறியாதவரா யிருந்தபடியால், தன்னூர் சேர்ந்த பிறகு ஜீவனேபாயம் தெரியாமல், குடும்பசம்ரக்ஷணர்த்தம்வெகுகவலேமேலிட்டு, பிதுரார்ஜிதமான சொத்துக்களே ஒவ்வொன்ருக விற்றுத்தின்றும் நாள்கழிந்த பாடில்லே. யாம் ஆதியில் சொன்னபடி மறுபடியும் இரண்டு குழந்தைகள் அதிகரித்தன. முந்திய பெண்ணுக்கு விவாகமும், பிந்திய பிள்ளேக்கு உபநயனமும் நடத்த, காலம் நெருங்கி மனதைவருத்திற்று. விசாலமான பழைய வீட்டில் விளக்குவைக்க எண்ணெய்க்கும் வழியில்லே. தரித்திரம் மேலிட்டபடியால் ஒருவேளேப் போஜனத்திற்கும் திண்டாட்டமாயிற்று. கடன் கொடுப்பாருமில்லே. வீட்டின்பேரில் கடன் கொடுத்திருந்த ஆசாமி கோர்ட்டில் வழக்கிட்டு வீட்டை ஜப்திசெய்ய, ஏலம் போடத் தேதிகுறிக்கப்பட்டது. சங்கர்ஜி எங்கேயோடித் தப்பிக்கலாமென்று யோஜிக்கிருர். குழந்தைகள் பசியால் வருந்துகின்றன. கமலமோ கண்ணும் கண்ணீருமாய் தவிக்கிருள். இங்கே ஸ்திதி இங்ஙனமிருக்க,

தமயன் நாகோஜி வீட்டை கவனிக்கும் பொழுது அவன் திரவிய மகிமையால் கண் தெரியாமல், அறிந்து பழகினவர்கள் எதிர்வந்து நின்று பெயர் குறிப்பு சொன்னபோதிலும், தெரியாதவன்போல் பாசாங்கு செய்துக் கொண்டு தன்னுடைய கைவிரல்கள் நிறைந்து கல்லிழைத்த மோதிரங்களேயும், பெண்சாதி யணிந்துக்கொண்டிருக்கிற பொன்னுபரணங்களேயும் அடிக்கடி பார்த்து ஆநந்தித்துக் கொண்டிருந்தான். அவன் பெண்சாதியோ மகா கொடியவள். ஒருநாள் அவள் தன் சமையலறையிலிருக்கையில் ஒரு ஸ்திரீ இயற்கை யழகே மிகுந்து செயற்கை யழகின்றி சில குழந்தைகளுடன்வந்தாள். அவர்களேப் பார்ப்பதற்கு வெகுதூரத்திலிருந்து நடந்து வந்தவர்கள்போல் நெற்றியில் நீர்வடிய, பசியால் களேப்படைந்து, கண்குழிந்து, நின்று பேசவும் சக்தியற்றவர்களாய்த் தோற்றினர்கள். சுமார் மணி பதினென்றிருக்கலாம்.

'கொய்தாந் திரணத்தி னெய்தாகும் வெண்பட்சி
னெய்தா மிரப்போ னுவலுங்கா—னெய்யசிற
பஞ்சுதனி னெய்யானேப் பற்ருதே காற்றனுக
வஞ்சுமவன் கேட்ப திரிந்து.'

என்றபடி இவர்களுடைய அலங்கோலத்தைக்கண்ட காற்றும் பயப்படுவது நியாயமாக

விருக்க, அதற்கு விரோதமாக இரக்கமுற்று இளங்காற்று வீசியது. நெற்றியில் வடிகிற வியர்வை நீரைக் கையால் வழித்து எறிந்துக் கொண்டு நின்றவளைக்கண்ட நாகோஜியின் மனைவி "யார்?" என்றும், "என்ன சங்கதி?" என்றும் கேட்கவில்லை. இதனால், இன்னாரென்று தெரிந்துக்கொண்டே மமதையாலும், கர்வத்தாலும் லக்ஷியஞ்செய்யவில்லை என்பதை யறிந்தவள் நாணமுற்று, 'பசியறியாது வெட்கமும் நாணமும்' என்பதற்கிணங்கி 'நாகோஜி எங்கே' என்று கேட்டாள்.

நாகோஜிமனைவி.—"அவர் எங்கே போனாரோ? யார் கண்டது? வேலை என்ன?" என்பதாகக் கடுகடுத்த வதனத்துடன் கூறி முகத்தைத் திருப்பிக்கொண்டாள்.

வந்தவள்.—குழந்தைகள் நடந்துவந்த அலுப்பால் அழுகின்றன. கொஞ்சம் பழைய அன்னமிருந்தால் குட்டிகளுக்குப்போடேன்.

நாகோஜி மனைவி.—(கோபக்குறி தொனியுடன்) இங்கேயார் பழையது சாப்பிடுகிறார்கள்?

'கொதிக்கிற கூழுக்கிருப்பீரானால்
இருப்புறை காணலாம்' எனறனள்.

வந்தவள் முகம்வாடி துக்கம் தொண்டையிலடைக்க, பசி வயிற்றைப் பிடுங்கித்தின்ன, குழந்தைகள் இது கொடு அது தா வென்று அலட்ட, புறக்கடைப்புறம் திரும்பி கொல்லையை நோக்கித் தன் குழந்தைகளுடன் சென்றனள். அவ்விடத்தில் நாகோஜிராவ் சிற்சில பண்ணையாட்கள் செய்கிற வேலையை மேற்பார்வை பார்த்துக்கொண்டிருந்தவர், வந்தவர்களைக் கடைக்கண்ணால் பார்த்து சும்மாவிருந்துவிட்டனர்.

வந்தவள்.—(சற்று பொறுத்திருந்து) நாகோஜி, குழந்தைகள் பசியால் தவிக்கிறது. சமையலோ இன்னுமாகவில்லை. தென்னமரத்திலிருந்து நான்கு இளநீராவது போடச் சொல்லி வெட்டிப் பொத்திக்கொடேன்.

நாகோஜி முணுமுணுத்துக்கொண்டு இரண்டு இளநீர் தள்ளச்சொல்லி வெட்டிக் கொடுப்பித்தான். அவை அதிக இளசான குரும்பையானபடியால், நீரும் கொஞ்சம், தேங்காய் வழுக்கல் கூட அதிகமாயில்லை. ஒரு குழந்தைக்காவது தொண்டைகூட நன்றாக நனையவில்லை. குழந்தைகள் எனக்கு உனக்கென்று செய்கிற ரகளையையும் ஒரு குழந்தை தேங்காய் மட்டையிலுள்ளதை தன் பல்லாற் கரண்டித்தின்பதையும் கண்ட நாகோஜி 'தரித்திரப் பிணங்கள்' என்று சொல்லி வேறு வேலையாய்ப் போய்விட்டான்.

வந்தவள்.—

"நல்லார் இளந்தேங்காய் நன்றாய்க் காய்த்தாயே
பாவி இளந்தேங்காய் பாலாடைபோற் காய்த்தாயோ?"

என்று சொல்லிவிட்டுத் திரும்பினாள். குழந்தைகளைத் பொறுமையுடன் இன்சொற்களால் ஆதரவூட்டிக்கொண்டு மெல்ல மெல்ல நடந்து பகல் சுமார் ஒரு மணிக்கு காரைச்செடிகள் நிறைந்த ஒரு காட்டின் வழியே செல்கிற பாதையினோரத்திலுள்ள ஒரு குட்டையையும் கன்னிமார் கோவிலையும், அதன் பக்கத்திலுள்ள ஆலமரத்தடியில் வழிப்போக்கர்கள் தங்கி சமையல்செய்து எறிந்துவிட்டுப்போன பெரிய மண்பாத்திரங்களையும், முக்கல்லாற் கூட்டப்பட்ட ஒரு அடுப்பில் நெருப்பு புகைந்துக் கொண்டிருப்பதையும் கண்டு, ஒரு பெரிய சட்டியை யெடுத்துக் கழுவி காரைச்செடிகளிலுள்ள இளந்தளிர்களைக் குழந்தைகளும் தானுமாகக்கொய்து, சட்டியிலிட்டு, அடுப்பேற்றி தகுந்த அளவு நீரையும் வார்த்து, தீக் கொளுத்தி வேவித்தனள். குழந்தைகளுக்கு கீரைசுண்டித் தருவதாய் வாக்களித்தும், ஆசைகாட்டியும், குட்டையில் விளையாட உத்தரவுகொடுத்தும், ஆயாசந்தீர்த்ததன்றி, இப்பேர்க்கொத்த அநாதாவான காலத்திலும் கலங்காத மனோதிடமுள்ளவளாயிருந்தாள்.

இங்ஙனம் பிள்ளைகள் ஒருபுறம் விளையாட, தான் அடுப்பண்டையுட்கார்ந்து கீரையைக்

கிண்டிக்கொடுத்து அதற்கிட உப்பில்லாத தால் விசனமுற்று பரிபூரணரும் சர்வவியாப கருமான பகவானே, "ஆபத்பாந்தவா" என வாய்விட்டுக் கதறிக்கூவி அனுதியாகிய தான் செய்யும் கீரையை தேவாமிருதமாகும்படியா கவும், தன் குழந்தைகளே அதனுல் பசியாற் றும்படியாகவும், மூன்றுடி வருந்தினுள், வாடி னுள், நமஸ்கரித்தாள், கைகூப்பினுள், சிரமேற் றாக்கினுள் பலதரம்.

இரண்டுதடவை மூடியிருக்கும் சட்டியைத் திறந்து கீரையைப்பார்த்தாள். நீராவியால் கீரை கணணுக்குப் புலப்படவில்லே. கொம் புகொண்டு எகித்துப்பார்த்தாள். பொன்னிற மான ரசம் கசம்பியோடிற்று. சுகவாசனே கம கம வெனப் பரிமளித்தது. அவற்றை முகர்ந்த புள்ளினங்கள் கூவிப்பறந்து வட்டமிட்டன. பிள்ளேகள் பசியால் வருந்தும் கஷ்டத்தையும், தாயின் பரிதாபத்தையும் கண்டுகேட்ட கதிர வன் மனதிரங்கித் தன் கிரணங்களே யொடுக்கி சுவர்ணநிறமாய் மேற்குத் திக்கில் பரபரப்பா யோடிக்கொண்டிருந்தான். சட்டியை அடுப் பைவிட்டிறக்கி, சூடாறின பிறகு ஆத்திரத்தி னுல் எல்லோரும் வட்டமாக நின்று, கீழே கற்பாறையின்பேரில் கவிழ்த்தார்கள். கலகல வென்ற சப்தத்துடன் குவிந்தது. . . .

* * *

கண்டார்கள். கண்குளிர்ந்தார்கள். ஆநந் தித்தார்கள். பசி பஞ்சாய்ப்பறந்தது. குதூ கலத்துடன் பேருக்குக்கொஞ்சமாக வாரிக் கட்டிக்கொண்டு,

"காரைச்செடி வாழ கன்னியம்மாள் குட்டைவாழ,
காரைநகர் வாழ—இன்னுஞ்சிலகாலம்
செல்லப்பிறந்தகமும் வாழ."

எனவாழ்த்தி, கடுகி வழிநடந்து முச்சந்தி வேளேயில் விளுயகபுரம் சேர்ந்தார்கள்.

இவர்கள் தரித்திரத்தின் கொடுமையால் தம யன் வீடு சென்ற கமலாபாயும் குழந்தைகளும் என்பதையும், இவர்களுக்கு கடவுள் கிருபை யால் அகப்பட்டது ஒருகோடி திரவிய மென் பதும், இதைப்படிப்போருக்குத் தெரியாதிரா தென நம்பி மேல் நடந்தவற்றை ஒருவாறு கூறுவாம். தமயன் வீடுசென்ற வரலாற்றை யும், தனக்கு தமயன் இவ்வளவு திரவியமும் கொடுத்ததாகவும் புருஷனிடத்தில் சொல்லி, வேண்டிய பொன்னுபரணங்களேயும் நகைநட் டுகளேயும் தனக்கும் தன் குழந்தைகளுக்கும் செய்துகொண்டு கொஞ்சநாள் சென்ற பிறகு, தனக்குக் கடவுள் கிருபையாலுண்டா யிருக்கிற போகபாக்கியங்களேப்பற்றி தமயனுக் குத் தெரிவித்து, சகலாபரணருடியாய், குழந் தைகளுக்கும் வேண்டிய ஆடைய ஆபரணங் களே அணுவித்து, இரண்டு குதிரைகள் பூட் டிய வண்டியிலேறிக்கொண்டு தமயனேப்பார்க் கப் புறப்பட்டனள்.

தமயன் தன் பெண்சாதி பிள்ளேகளுடன் ஒருமைல் தூரம் எதிர்சென்றுவந்து, சகோதரி யும் அவள் குழந்தைகளும் அணிந்துகொண் டிருக்கும் ஆபரணங்களேயும் பட்டாடைகளே யும் கண்டு ஆநந்தித்து, கட்டித்தழுவி முத்த மிட்டு, கைக்குழந்தையை தன் சம்சாரத்தினி டத்திற் கொடுத்து, எடுத்துக்கொள்ளச்செய்து, மூத்தகுமாரனே தன் கையில் பிடித்துக் கொண்டு வண்டியேறிச்சென்று வீடுசேர்ந்து, தீர்த்தமாடச்செய்து முந்தியே ஏற்பாடுசெய் திருந்தபடி சித்தமாயிருந்த ஷட்ரச பதார்த்தங் களேயும் பக்ஷணபலகாரங்களேயும் தலேவாழை இலேகளில் பரிமாறி உட்கார்ந்து போஜனஞ் செய்யும்படியாக உபசரித்துப் பிரார்த்தித்தார் கள்.

* * * *

கமலாபாய் இந்த அமர்க்களத்தைக் கண்டு ஆநந்தித்து உடனே தான் முன்வந்தபொழுது நடந்தவைகளே நினேத்துத் துக்கித்து, இவ்வா டம்பரத்திற்கும் துக்கத்திற்கும் காரணம் தானும் தன் குழந்தைகளும் அணிந்துகொண் டிருக்கும் நகைகளும் பட்டாடைகளுமே எனத்துணிந்து, உடனே குழந்தைகளும் தானு மணிந்துகொண்டிருந்த நகைகளில் காரை,

வங்கி, பவுன்மாலை, அட்டிகை, காப்பு முதலிய சிலவற்றை கையில் வாங்கி பல பக்ஷண பதார்த்த பழவர்க்கங்களால் பரமாரப்பட்ட இலைகளின்முன் வைத்து "ஓ! காரையே, லட்டுசாப்பிடு, ஆ! வங்கியே, பாயசங்குடி, ஏ! பவுன்மாலையே, பேணியை ருசிபார்! ஓ! அட்டிகையே, அதரசம் புசி!" என்று அடுக்கடுக்காகப் பலதரம் கூறி நகைகளை எடுத்து அணிந்துக்கொண்டு பிள்ளைகளுடன் சரேலென்று புறப்பட்டு வண்டியேறி கணபதிபுரம் சேர்ந்து சுகித்திருந்தனள்.

* * * *

நாகோஜியும் அவன் மனைவியும் யாதொன்றும் தோன்றாமல் மரம்போல் நின்று திகைத்தார்கள்.

"நச்சப்படாதவன் செல்வம் நடுவூருள்
நச்சுமரம் பழுத்தற்று."—திருக்குறள்.

டி. சி. வேங்கட்டாரமணய்யர்.

---

## GLEANINGS FOR THE INDIAN KINDERGARTNER.

## அம்மையாரும் பன்றியும்.

ஒரே ஒரு அம்மையார் வீடுவாசல் பெருக்கிக்கொண்டிருக்கும்போது, ஒரு ரூபாய் அவளுக்கு அகப்பட்டது. இதைக்கொண்டுபோய் கடையில் ஒரு பன்றியை வாங்கிவருவோமென்று யோஜித்தாள். அதை வீட்டுக்கு ஓட்டிக்கொண்டுவரும்போது, ஓர் வேலியைத் தாண்டவேண்டி இருந்தது. பன்றி தாண்டாமல் அழும்பு பண்ணிற்று. அம்மையார், சற்று தூரத்தில் ஓர் நாயைக்கண்டு சொன்னாள்:—

"நாயே, நாயே, இந்தப்பன்னியைக் கடி,
வேலியைத்தாண்டமாட்டேன் என்கிறது;
எனக்கு இருட்டுக்குமுன் வீடுசேரவேண்டும்."

அந்த நாய் "நான் மாட்டேன்" என்றுவிட்டது. அம்மையார் சற்றுதூரம் போகவே, ஓர் கோல்எதிர்ப்பட்டது. அதோடுசொன்னாள்:—

"கோலே கோலே, இந்த நாயைச் சற்று அடி,
நாய் இந்தப் பன்னியைக் கடிக்காதாம்,
பன்னி வேலியைத் தாண்டாதாம்,
எனக்கோ இருட்டுமுன் வீடுசேரவேணும்.

கோலும் "மாட்டேன்" என்றது. இன்னம் சற்றுதூரம்போய் நெருப்பைக்கண்டு சொன்னாள்:—

நெருப்பேநெருப்பே, இந்தக்கோலைகொளுத்து,
கோல் நாயை அடிக்காதாம்,
நாயோ பன்னியைக்கடிக்காதம்,
பன்னி வேலியைத்தாண்டாதாம்,
எனக்கு இருட்டுக்குமுன் வீடுசேரவேண்டும்.

நெருப்பு "மாட்டேன்" என்றுவிட்டது. அம்மையார் கண்ணுக்கு இன்னம் கொஞ்ச தூரத்தில் ஜலம் எதிர்ப்பட்டது. அதையும் கேட்டாள்:

ஜலமே ஜலமே, இந்த நெருப்பை அணை.
நெருப்பு கோலைக்கொளுத்தாதாம்,
கோல் நாயை அடிக்காதாம்,
நாய் பன்னியைக்கடிக்காதாம்,
பன்னி வேலியைத் தாண்டாதாம்,
எனக்கு இருட்டுமுன் வீடுசேரவேணும்.

ஜலமும் மாட்டேன் என்றது. அம்மையார் இன்னம் சற்றுதூரத்தில் ஓர் எருதைப் பார்த்துச் சொன்னாள்:

எருதே எருதே, இந்த ஜலத்தைக்குடி,
ஜலம்நெருப்பை அணைக்காதாம்,
நெருப்பு கோலைக்கொளுத்தாதாம்,
கோல் நாயை அடிக்காதாம்,
நாய் பன்னியைக்கடிக்காதாம்,
பன்னி வேலியைத் தாண்டாதாம்,
எனக்கு இருட்டுமுன் வீடுசேரவேண்டும்.

அதுவும் மாட்டேன் என்றது. அம்மையார் இன்னம் கொஞ்சதூரம்போய் ஒரு துருக்கனைக்கண்டு கேட்டாள்:—

துருக்கா துருக்கா, எருதை வெட்டு,
எருது ஜலத்தைக்குடிக்காதாம்,
ஜலம் நெருப்பை அணைக்காதாம்,

நெருப்பு கோலைக் கொளுத்தாதாம்,
கோல் நாயை அடிக்காதாம்,
நாய் பன்னியைக் கடிக்காதாம்,
பன்னி வேலியைத்தாண்டாதாம்,
எனக்கு இருட்டுமுன் வீடுசேரவேண்டும்.

அவனும் மாட்டேன் என்றான். சற்றுதூரம் போய் ஓர் கயிறைக்கண்டு சொன்னாள் :—

கயிறே கயிறே துருக்கனைச் சுருக்கிடு,
துருக்கன் எருதை வெட்டமாட்டானும்,
எருது ஜலத்தைக்குடிக்காதாம்,
ஜலம் நெருப்பை அணைக்காதாம்,
நெருப்பு கோலைக் கொளுத்தாதாம்,
கோல் நாயை அடிக்காதாம்,
நாய் பன்னியைக் கடிக்காதாம்,
பன்னி வேலியைத் தாண்டாதாம்,
என்க்கு இருட்டுமுன் வீடுசேரவேண்டும்.

அதுவும் மாட்டேன் என்றது. இன்னம் சற்று தூரம்போகவே ஓர் எலியைக்கண்டு கேட்டாள் :

எலியே எலியே, இந்தக் கயிற்றைக்கடி,
கயிறு துருக்கனைச் சுருக்கிடாதாம்,
துருக்கன் எருதை வெட்டமாட்டானும்,
எருது ஜலத்தைக் குடிக்காதாம்,
ஜலம் நெருப்பை அணைக்காதாம்,
நெருப்பு கோலைக் கொளுத்தாதாம்,
கோல் நாயை அடிக்காதாம்,
நாய் பன்னியைக் கடிக்காதாம்,
பன்னி வேலியைத் தாண்டாதாம்,
எனக்கு இருட்டுமுன் வீடுசேரவேண்டும்.

அதுவும் மாட்டேன் என்றது. சற்றுதூரம் போய் ஒரு பூனையைக்கண்டு சொன்னாள் :—

பூனைபூனை, இந்த எலியைக்கொல்,
எலி கயிற்றைக் கடிக்காதாம்,
கயறு துருக்கனைச் சுருக்கிடாதாம்,
துருக்கன் எருதை வெட்டமாட்டானும்,
எருது ஜலத்தைக் குடிக்காதாம்,
ஜலம் நெருப்பை அணைக்காதாம்,
நெருப்பு கோலைக் கொளுத்தாதாம்,
கோல் நாயை அடிக்காதாம்,
நாய் பன்னியைக் கடிக்காதாம்,
பன்னி வேலியைத் தாண்டாதாம்,
எனக்கு இருட்டுமுன் வீடுசேரவேண்டும்.

அந்தப்பூனை சொல்லிற்று : "அதோ பசுமாடு இருக்கிறது. அங்கேபோய் லோட்டா பால் கொண்டுவந்து கொடுத்தால் எலியைக்கடிப்பேன்" என்றது. அம்மையார் அங்கேபோய் பசுவைப் "பால்கொடு" என்று கேட்டாள். அந்தப்பசு கொஞ்சம் வைக்கோல் கொண்டு வந்து போட்டால், பால் தருவேன் என்றது. அம்மையார், குடியானவன் வீரப்பனிடம் போய் வைக்கோல் கொடு என்று கேட்டாள். அவன், அதோ ஆறு ஓடுகிறது ஒரு சொம்பு தண்ணீர் கொண்டுவந்துகொடு, வைக்கோல் தருகிறேன் என்றான். அம்மையார், ஒரு சொம்பு எடுத்துக்கொண்டுபோய், ஆற்றில் தண்ணீர் மொண்டாள். அது அடியெல்லாம் ஓட்டையா யிருந்தபடியால், சிறு கற்களைப் போட்டு கையால் ஓட்டையை அடைத்துக் கொண்டு ஜலம் மொண்டுவந்து குடியானவனுக்கு கொடுக்கவே, அவன் வைக்கோல் கொடுத்தான், வைக்கோலைக்கொண்டு பசுவுக்குப்போட்டாள், அது பால் கொடுத்தது. பாலைப் பூனைக்குக்கொடுத்தாள் : பூனை எலியை கொல்லப்போயிற்று,

எலி கயிற்றைக் கடிக்கப்போயிற்று,
கயிறு துருக்கனை சுருக்கிடப்போயிற்று,
துருக்கன் எருதை வெட்டப்போனான்,
எருது ஜலத்தைக் குடிக்கப்போயிற்று,
ஜலம் நெருப்பை அணைக்கப்போயிற்று,
நெருப்பு கோலைக் கொளுத்தப்போயிற்று,
கோல் நாயை அடிக்கப்போற்று,
நாய் பன்னியைக் கடிக்கப்போயிற்று,
பன்னி பயந்து வேலியைத் தாண்டிற்று,
அம்மையாரும் இருட்டுமுன் வீடுபோய்ச் சேர்ந்தாள்.

அ. ஸ்ரீனிவாஸையர் பி. ஏ.

## பாய் ப்ரேமாபாய்.

பம்பாயில் இப்பெயருள்ள இளமாது ஒருத்தியிருக்கிறாள். இவள் அந்நகர்வாசியான ஒரு தனிகருக்கு மைத்துனி. சென்ற ஒன்றரை வருஷகாலமாக இவள் அன்ன ஆகாரமின்றியிருக்கிறாளென்றும் அதனால் களைப்பிளைப்புத் தோன்றுவதில்லையென்றும் மற்றவர்களைப் போல் வீட்டுவேலைசெய்து வருகிறாளென்றும் புருஷனோடு வாழ்ந்துவருகிறாளென்றும் தெரியவந்தது. சுத்தமாக அன்ன ஆகாரமின்றி எல்லாரையும்போல் ஆடியோடி வேலைசெய்து உழன்று வருவதென்றால் அது மிகவும் அதிசயந்தானே. இந்தத் தேகத்துக்குள்ள உபாதிகளெல்லாவற்றிலும் பசிப்பிணி மிகப்பொல்லாதது. அதைப்பொறுத்தல் யாவர்க்குமரிது. எப்பேர்ப்பட்ட மஹா தபசிகளும்கூட இலைகாய் கிழங்குகளையுண்டு சுத்த ஜலம் அருந்திப் பசியாற்றிவரவேண்டியிருக்க, இம்மாது யாதொரு யோகம் தபசு ஒன்றுமின்றி பசிப்பிணியாகிய உபாதியேயின்றியிருக்கிறாளென்றால் அது எப்படி நம்பத்தகும். ஆனாலும் நம் ஹிந்துக்களில் சாதாரண ஜனங்களுக்கு அதிசய அற்புதங்களைச் சுலபமாக நம்பும் ஸ்வபாவம் அதிகமாகையால், அவர்கள் அந்த அம்மணிபேச்சை நம்பி அவளைத் தெய்வமாகக் கொண்டாடத் துவக்கிவிட்டார்கள். இவ்வதந்தி சிறிதுகாலத்தில் நாடெங்கும் பரவி ஜனங்களுக்குள் விசேஷமாகப் பேசிக்கொண்டாடப்பட்டுவர, இது சங்கதி பத்திரிகைகளில் வெளிவரலாயின. பத்திரிகைகளில் வெளிவரவும் கற்றோர் மற்றோர் எல்லாரும் இதை யோர் அதிசயமாகக்கொண்டாட இந்தியாமுழுமையும் இது ஓர் பெரிய அதியமாகப் பாவிக்கப்பட்டுவந்தது. இந்தியாவுக்குமட்டுமன்று உலகத்துக்கே இது ஒரு அதிசயந்தானே!—சங்கதிமட்டும் உண்மையாயிருந்தால். ஜீவப்பிராணிகள் உயிரோடிருக்க ஆகாரம் அத்யாவசியகம். சுத்தமாக ஆகாரமின்றி சௌக்கியமாக ஜீவித்திருப்பது தேகத்தோடுகூடிய எந்தப்பிராணிக்கும் கூடாமையாகவிருக்க, இவ்விளமாதுமட்டும் அவ்வியற்கைவிதிக்கு விரோதமாக சுத்தமாய் அன்ன ஆகாரமின்றி ஒன்றரை வருஷகாலமாக ஜீவித்திருக்கிறாளென்று சொன்னால் இதனுண்மையை ஆராயாது விடுவது சரியல்லவே. ஆனாலும் இதனுண்மையை ஆராய்வது இலகுவான காரியமல்ல. மிகவும் கஷ்டசாத்தியமானது. மிக்க ஜாக்கிரதையோடு செய்யவேண்டிய காரியம். இருந்தாலும் இதன் பொறுப்புக்கு அஞ்சாமல், பம்பாயில் பேர்போன டாக்டராயிருக்கும் கனம் ஸர். பாலச்சந்திரகிஷ்ண என்பவர் அம்மாதைப் பார்வையிட்டு அவள் தேகாரோக்கியம் குன்றாதவளாயிருந்ததைக் கண்டு தான் வாய்மொழியாக விசாரித்த மட்டில், வெளியிலுலாவும் வதந்திக்குச் சரியாக அந்த மாது தங்கிலேயைத் தெரிவிக்கக்கேட்டு, இதன் உண்மையை ஆராய்ந்து பார்க்கவேண்டுமென்று சொன்னார். உடனே அந்தப் பெண்ணின் கார்டியனும் அந்தப் பெண்ணும் யுக்தம்போல் பரிசீலனைசெய்து பார்த்துக்கொள்ளச் சம்மதித்தார்கள். முதலில் அப்பெண்ணை ஆஸ்பத்திரிக்கனுப்பி அவள் உண்மையில் எவ்வித ஆகாரமும் அருந்தாமலிருக்கின்றாளாவென்று தகுந்த ஏற்பாடுசெய்து பார்வையிட்டுவர உத்தேசித்தார்கள். அதற்கு அவ்வம்மணி யுடன்படாமல் தனியாக ஒரு வீடு அல்லது பங்களா அமர்த்தி அதில் தான் ஸ்நான ஜபம் செய்வதற்கு வேண்டிய சௌகரியங்கள் அமைத்துக்கொடுத்தால் தான் அங்குவந்து தனியாக விருக்கிறதாகவும், தன்னைச் சுற்றித் தாதிகளோ, பெண் வைத்தியர்களோ எப்போதுமிருக்கத் தனக்கு ஆக்ஷேபமில்லையென்றும் சொன்னாள். உடனே டாக்டர் பாலச்சந்தரகிஷ்ண அவர்கள் பம்பாயிலுள்ள வைத்தியர்களையெல்லாம் கூட்டி அவர்கள் முன் தானறிந்தமட்டில் இந்தம்மணியின் விசேஷங்களையத்தெரிவித்து இதனுண்மையை ஆராய்ந்து அறியவேண்டியது சாஸ்திராராய்ச்சிக்கு முக்கியமான விஷயமாகவிருப்பதால்

அங்குள்ள டாக்டர்களெல்லாம் சேர்ந்து ஒரு கமிட்டியாகச்சேர்ந்து இதனுண்மையைச் சந்தேகத்துக்கிடமின்றி அறியவேண்டுமென்று ப்ரேரேபித்துப் பேசினர். எல்லாரும் சம்மதித்தார்கள். பொதுவில் கையொப்பம்செய்து வேண்டிய திரவியசேகரம் செய்துகொண்டு, தனியாக ஒரு பங்களா அமர்த்தி அதில் அந்த அம்மணியை வந்திருக்கச்செய்து நாலு வெள்ளைக்கார நர்ஸுகள், நாலுமணிக்கு ஒருவராக முறையிருந்து சதா அவ்வம்மணியை நுட்பமாய்ப் பார்த்துவரவேண்டுமென்றும், இரண்டு மணிக்கு ஒருவராக கமிட்டி மெம்பர்களில் ஒவ்வொருவர், அங்கு இருக்கவேண்டுமென்றும், லேடி டாக்டர் ஒருவர் தினமிரண்டு மூன்று தடவை அந்தம்மணியைவந்துபார்த்து வரவும் ஏற்பாடுசெய்து நாலு நாளைக்கு இராப்பகலாக அவ்வம்மணியைக்காத்து அவள் ஆகாரம் அருந்துகிறளா அல்லது ஆகாரத்தில் விருப்பமாவது கொள்கிறளாவென்று பார்த்து வந்தார்கள். மூன்று நாளைக்குப்பின் அந்த அம்மணியினெடை 3-பவுண்டு குறைந்தது. நாலாநாள் அவள் ஸ்நானம் செய்கையில் அரையில் ஏதோ துணிமுடிப்புத்தெரிய, கூடவிருந்த நர்ஸ் மில்லேர்ட் என்னும் வெள்ளைக்காரச்சி அதையறிந்து ஆஜராயிருந்த கமிட்டி மெம்பருக்குஉடனே தெரிவித்தாள். அவர் அதைப் பரிசோதிக்கும்படி உத்தரவுசெய்ய, அம்முடிப்பைக்காட்டும்படி கேட்டாள். அதற்கு அவள் அதைக்காட்டாதெள்ளிக்க அது நழுவிக் கீழே விழுந்தது. அதை அவிழ்த்துப்பார்க்க ஒரு அழுக்குத்துணியில் கொஞ்சம் ரொட்டியும் வேறு பலகாரவகை சிறிதுமிருக்கக்கண்டாள். ரொட்டி யழுகிப் பூஞ்சாளம்பிடித்துப் போயிருந்தது. இதை அவ்வம்மணி வீட்டைவிட்டுவரும்பொழுதே ஒளித்துவைத்துக் கொண்டு வந்ததாகத் தெரிகிறது. இங்குவந்தபின் கட்டுக்காவல் பலமாயிருந்ததால் யாருமறியாமல் அதைச்சாப்பிடுவது அவளுக்குக் கூடாமையாகப் போய்விட்டது. உடனே இது சங்கதி கமிட்டியாருக்குத் தெரியவா அவர்கள் கூட்டங் கூடி அந்தமாதைத் தன் வீட்டுக்கு அனுப்பிவிடவும், அவளை வீட்டிலுள்ளார் யாரும் தொந்திரவுசெய்யாமலிருக்கும்படி பார்த்துவர போலீஸ் கமீஷனருக்குத் தெரிவித்தும் அவள் சுத்தமாக ஆகாரம் செய்யாமல் 1½-வருஷகாலமிருந்ததாகச்சொன்னது சுத்தப்பொய்யென்று தீர்மானித்துச் சும்மாவிருந்தார்கள். இந்தச்சூதை அவர்கள் கண்டுபிடிக்கத்தவறியிருந்தால், ஐரோப்பா அமெரிக்காவிலிருந்து இந்தக் கேஸின் உண்மையையறிந்து இதன் காரணத்தைக் கண்டுபிடிக்க பெரிய பெரிய டாக்டர்களெல்லாம் வந்துவிடுவார்கள. அவர்கள்வந்து இச்சூதைக் கண்டுபிடித்தால், பம்பாயிலுள்ள டாக்டர்களுக்கெல்லாம் பெரும் பழிப்பும் அவமானமும் நேர்ந்திருக்கும். அவ்வளவுக்கும் துணிந்து அவர்கள் அந்தக் கேஸின் உண்மையை ஆராய்ந்தறியப் புகுந்தது மிகவும் மெச்சத்தக்கதே. இவர்கள் இப்படி அந்த மோசத்தைக் கண்டுபிடித்திராவிட்டால் இவள் கீர்த்தி இந்தியாவெங்கும் பரவி தேசதேசங்களிலிருந்தும் ஜனங்கள் இவளைத் தெய்வமென்று பார்ப்பதற்காக யாத்திரைவரத் தலைப்படுவார்கள். அதை யடக்க யாராலும் முடியாமற்போய்விடும். அமெரிக்காவில் ஒரு டாக்டர் தான் 40-நாள் பட்டினியிருந்ததாகப் பிரபலப்படுத்த அவர் வார்த்தையைப் பரீக்ஷிக்கவேண்டி டாக்டர்கள் கூடி இம்மாதிரி பரீக்ஷைசெய்ய அவர் திருட்டுத்தனமாக மாம்சரசம் பருகிவரக் கண்டுபிடித்தார்கள். அந்த குட்டு வெளிப்பட்டதும் அவருடைய பெருமை யடங்கிப்போய்விட்டது. இப்படி எதையும் உள்ளபடி ஓர்ந்து ஆராய்ந்து உண்மையை யுணர்ந்து பார்ப்பதுவே விவேகிகளுக்கடையாளமாம். ஒருவன் வெள்ளைக்காக்கை பறந்ததென்னுமுன், நான்கண்டேன், நான் கண்டேன் என்று சொல்லிக்கொண்டு புறப்படுகிறவர்கள் மூடமதிகளேயன்றி வேறல்லர். இப்படிப்பட்ட மூடமதிகள் இந்தியாவில் மிக மலிந்து நிறைந்து கிடக்கிறார்கள்.

---

## வேதாந்தம்.

### III

அடுத்த முறையில் அறியவேண்டிய விஷயம் இது. இந்தச் சரீரமானது ஜடபதார்த்தத்தாலாகிய ஒரு நீரோட்டத்தைப்போலொத்தது. ஒவ்வொரு நிமிஷமும் அதற்குச் சத்துச்சேர்த்துக்கொண்டிருக்கிறோம். ஒவ்வொரு நிமிஷமும் அதிலிருந்து சத்து வெளியில் போய்க்கொண்டிருக்கிறது. இது எதுபோலென்றால் எவ்வாறு இடைவிடாமல் ஓடிக்கொண்டிருக்கும் ஒரு நதியில் ஏராளமான தண்ணீர் இடம்விட்டு இடம் பேர்ந்துகொண்டு போகின்றதோ அதுபோல. ஏககாலத்தில் நாம் முழுமையும் ஒன்றாக நினைத்து அதை ஒரே நதியென்று அழைக்கிறோம். நாம் எதை நதியென்று சொல்லுகிறோம்? ஒவ்வொரு நிமிஷமும் தண்ணீர் மாறிக்கொண்டிருக்கிறது. கரையும் மாறுபாடடைகிறது, நிமிஷந்தோறும் மரங்களும், செடிகளும், இலைகளும், தழைகளும் மாறுகின்றன. அப்படியானால் நதி யென்பதென்ன? இவ்வாறு தொடர்ச்சியாய் மாறுபாடடைவதற்குத்தான் அப்பெயர். இதுபோலவே மனமும். பௌத்த மதத்தில் மஹா க்ஷணிகவிஜ்ஞானவாத மென்றொரு கோட்பாடுளது. அதை யறிந்துகொள்வது மிகவும் கடினமாயிருந்தபோதிலும் அது மிகவும் நியாயசாஸ்திரோக்தமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. இக்கோட்பாடு, வேதாந்தத்தின் சில பாகத்திற்கு விரோதமாக இந்தியாவிலும் கிளம்பிற்று. இதற்கு அத்துவைதத்திலிருந்துதான் சமாதானம் சொல்லவேண்டியதாயிற்று. அத்துவைதத்தைத் தவிர வேறொன்றும் இதற்கு மறுமொழி சொல்லத்தக்கதில்லையென்றுபின்னால் நாமே அறிந்துகொள்ளலாம். அத்துவைதத்தைப்பற்றி ஜனங்களுக்கு எவ்வளவு விநோதமான எண்ணங்களிருந்தபோதிலும், அத்துவைதத்தைப்பற்றி ஜனங்களுக்கு எவ்வளவு பயமிருந்தபோதிலும் அது இவ்வுலகத்தை இரக்ஷிப்பதற்கு மார்க்கமென்று நாம் காணலாகும். ஏனெனிற் சகல வஸ்துக்களுக்கும் முகாந்தரம் அதில்தான் காணலாம். துவைதமும், இன்னும் மற்றவைகளும், நாம் கடவுளை வணங்குவதற்குரிய மார்க்கத்தைக் குறிப்பிப்பதிற் சிறந்தவைதான்; நம் மனத்தையும் திருப்திப்படுத்துகின்றன. நம் மனத்தைத் தேர்ச்சிசெய்வதற்கும் உதவிசெய்கின்றன. ஆனால் ஒரு மனிதன் நியாயமாயும், மதவனுசரணையாயு மிருக்கவேண்டுமானால், இவ்வுலகில் அத்துவைதந்தான் அவனுக்கு ஒரு முறைமை. நல்லது; ஒருநதியானது ஒருபக்கத்தில் தண்ணீர் பேர்ந்து போய்க்கொண்டும், மற்றொருபக்கத்தில் தண்ணீர் நிரம்பிக்கொண்டு மிருப்பதுபோல மனம் என்பது இருக்கிறது. 'ஆத்மன்' என்று நாம் சொல்லுகிற ஐக்கியம் எங்கே யிருக்கிறது? தேகத்தில் இடைவிடாமல் மாறுபாடிருந்தபோதிலும், மனமும் இடைவிடாமல் மாறிக்கொண்டிருந்தபோதிலும், நமது எண்ணங்கள் மாறத்தக்கவையல்ல. வஸ்துக்களைப்பற்றிய நமது எண்ணங்கள் மாறாதவைகளா யிருக்கின்றன. ஆகையால் பற்பல திசைகளிலிருந்தும் வருகிற கிரணங்கள், ஒரு திரையின் மேலாவது, ஒரு சுவரின்மேலாவது அல்லது ஸ்திரமாயிருக்கிற வேறெதன்மேலாவது விழுந்தால், அப்போது அவைகளுக்குள் ஓர் ஐக்கியமுண்டாகும். அப்போது தான் அவைகளெல்லாம் ஒன்றாய்ச் சேர்ந்து ஓர் உருவமாகும். இதுபோல பற்பல எண்ணங்கள் மனிதரின் அவயவங்களின் மேல் விழுந்து அங்கு ஒற்றுமையையடைந்து எல்லாம் ஒன்றாகின்றன? நிச்சயமாகவே இது மனமாயிருக்கக்கூடாது. ஏனெனில் நிலையாயிராமல் மாறுபடுகின்றது. ஆகையால் தேகமுமில்லாமல் மனதுமில்லாமல் வேறொரு வஸ்துவாயிருக்கவேண்டும். அது மாறுதலில்லாமல் எப்போதும் நிலையாயிருக்கவேண்டும். அதன்மேல் நம்முடைய எண்ணங்களெல்லாம் விழுந்து அவைகள் ஒன்றாய்ச்சேரவேண்டும். இதுதான் உண்மையான ஆத்துமா, மனித

னது 'ஆத்மன்'. ஜடசம்பந்தாமன ஒவ்வொரு வஸ்துவும் நேர்த்தியான வஸ்துவாயிருந்தாலும், மனமாயிருந்தாலும் அது மாறுதலைய டையவேண்டும். நாம் ஸ்தூலவஸ்துவென்று சொல்லுகிற வெளியுலகமும், அதை ஒப்பிட்டுப்பார்க்குங்கால் மாறுதலை யடையவேண்டும். இந்த மாறுதலில்லாமல் நிலையாயிருக்கும் வஸ்துவோ, ஜட சம்பந்தமானதாயிருக்க முடியாது. ஆகையால் அஃது அரூபமானது; ஜடவஸ்துவன்று; அழியாததும் நிலைபெற்றதுமானது.

வெளியுலகத்தைப்பற்றி முற்கூறிய வியவகாரங்களைத் தவிர இப்போது நாம் கவனிக்கவேண்டிய விஷயம் யாதெனில், வெளியுலகத்தைப் படைத்தது யாவர்; ஜடபதார்த்தத்தை சிர்ஷ்டித்தார் எவர் என்பதேயாம். இதன் உண்மையை மனிதனுடைய உள்சுபாவத்திலிருந்து தான் அறியவேண்டும். ஆத்துமாவைப்பற்றி என்ன வியவகாரங்கள் உண்டாயினவோ அவை இங்கும் உண்டாகின்றன. மனத்தையும், தேகத்தையுந்தவிர ஒவ்வொரு மனிதனிடத்திலும் மாறுபடாத ஆத்துமா ஒன்றிருக்கிறதென்று வைத்துக்கொண்டால், அங்கும் ஆத்துமாக்களுள் ஒரே ஐக்கியமிருக்கிறது. அதாவது ஒரே எண்ணமும், ஒரே உணர்ச்சியும், ஒரே அநுதாபமும் இருக்கிறது. என்னுடைய ஆத்துமாவானது உங்களுடைய ஆத்துமாவை எவ்வாறு பாதிக்க முடியும்? எதன்மூலமாய் வேலைசெய்து எதன்மூலமாய்ப் பாதிக்கும்? உங்களுடைய ஆத்துமாவைப்பற்றி எதையும் நான் எப்படி உணரக்கூடும்? உங்களுடைய ஆத்துமாவையும் என்னுடைய ஆத்துமாவையும் ஒன்றாய்த் தொட்டுக்கொண்டிருப்பது எது? தத்துவநூலுக்குரித்தான ஆத்துமா ஒன்று உளதென்று நாம் ஒத்துக்கொள்ளவேண்டும். ஏனெனிற் பற்பல ஆத்துமாக்களையும், சடப்பொருள்களையும் ஸ்பரிசிப்பதற்கு ஓர் ஆத்துமாவிருக்கவேண்டும். இவ்வுலகின்கணுள்ள கணக்கற்ற ஆத்துமாக்களை மறைத்துக்கொண்டும், அவைகளுள் ஊடுருவிச்சென்றும், அவைகளின் மூலமாய் ஜீவித்துக்கொண்டும், அவைகளுக்காக அநுதாபப்பட்டுக்கொண்டும், அவைகளை நேசித்துக்கொண்டும், அவைகளுக்காக வேலை செய்துகொண்டுமிருக்கிற ஆத்துமா வொன்றிருக்கவேண்டும். இந்த ஸர்வவியாபக ஆத்துமாவே, இப்பிரபஞ்சத்துக்குக் கர்த்தாவாகிய 'பரமாத்மன்' என்று சொல்வது. திரும்பவும் ஆத்துமா ஜடப்பொருளினுற் செய்யப்படவில்லை யாதலாலும், அஃது அரூபமானதாதலாலும், ஜடப்பொருள்களுக்கு ஏற்படுத்தப்பட்டிருக்கும் நிபந்தனைகளின் பிரகாரம் நடக்கமாட்டாது. அன்றியும் அந்நிபந்தனைகளையனுசரித்து அதை நாம் நிதானிக்கவும் கூடாது. ஆகையால் அதற்கு சாவுகிடையாது, மாறுபாடுங்கிடையாது—'நைனம்சிந்தந்திசஸ்திராணி' இந்தச் சுயம்புவை நெருப்பினுல் எரிக்கமுடியாது, ஆயுதங்களாற் குத்தமுடியாது, கத்தியினுல் துண்டாக வெட்டமுடியாது. காற்றினுல் உலராது, தண்ணீரினுல் நனையாது. மனிதனுடைய இந்தச் சுவயம்புவானது ஜயிக்கக்கூடாதது. அதற்குப்பிறப்புமில்லை அழிவுமில்லை. அப்படியானுல் இந்தச் சுவயம்பு என்ன செய்கிறது? கீதையிற்சொல்லியிருக்கிற பிரகாரமும், வேதாந்தத்திற் சொல்லியிருக்கிறபிரகாரமும், இந்த ஒரே சுவயம்புவைத்தான் 'விபு' என்று சொல்லுவது என்று நாம் அறிந்திருக்கிறோம். கபிலர் இதைச் சர்வவியாபகமுள்ளதென்று சொல்லுகிறார். இந்தியாவில் சில மதஸ்தர்கள் இந்தச் சுயம்புவை 'அணு' வென்று சொல்லுகிறார்கள். ஆனுல் அவர்கள் பிரத்தியக்ஷத்தில் காணப்படுகிற அணு வென்று வதற்கு அர்த்தங்கொள்ளுகிறார்கள். அதன் உண்மையான சுபாவம் 'விபு.'

விநோதமான இன்னுமோர் எண்ணம் உளது. அது விநோதமாயிருப்பினும் இந்தியாவுக்கு உரித்தானது. நம்மெச்சாதியாருக்கும் பொதுவாகிய எண்ணமொன்று உண்டென்றால் அஃது இதுவேயாம். ஆகையால் இவை நீங்கள் கவனமாய்க்கேட்டு ஞாபகத்தில் வைத்துக்கொள்ளும்படி வேண்டிக்கொள்ளுகிறேன். ஏனெ

னில் இந்தியாவில் நமக்கிருக்கும் ஒவ்வொரு வஸ்துவுக்கும் இது தான் ஆதாரமாகின்றது. அவ்வெண்ணம் யாதெனில், மேற்றிசையில் ஜெர்மானியா தேயத்தவர்களும் ஆங்கிலேயர் களும் உபதேசித்துவரும் 'பூதபௌதிகங்களை விவரித்தல்' (Physical Evolution) என்னும் கோட்பாட்டைப்பற்றி நீங்கள் கேட்டிருக்க லாம். வெவ்வேறு பிராணிகளின் தேகங்களும் உண்மையாய் ஒரேதேகத்தை உடைத்தா யிருக்கின்றன வென்றும் ஆனல் அவைகளுக் குள் காணப்படும் வித்தியாஸமெல்லாம் ஒரே வகுப்பின் வெவ்வேறுவிதத் தோற்றமே தவிர வேறில்லையென்றும், எல்லாவற்றிற்கும் கீழான புழுமுதல் எல்லாவற்றிற்கும் மேலான மனி தன்வரை எல்லாம் ஒன்றுதானெனவும், ஒன் றுமற்றொன்றாகமாறி வரவரக் கடைசியாய்ச் சம்பூரணத்தையடையுமட்டும் உயர்ந்தபதவி யையே அடைந்துகொண்டு வருகின்றதென வும் அக்கோட்பாட்டினல் தெரியவருகிறது. நாமும் அவ்வாறே உயர்ந்தபதவிக்கு வந்திருக் கிறோம். மகருஷி பதஞ்சலி யென்பவர் 'ஜாத்யந் தரபரிணமம்' என்று சொல்லியிருக்கிறர். அஃ தாவது (ஜாதி—வகுப்பு) ஒருவகுப்பு மற் றொன்றாக மாறுகிறதெனப் பொருள். பரிண மம் என்பதற்கு ஒரு வகுப்பு மற்றொரு வகுப் பாக மாறுகிறதுபோல ஒருவஸ்து மற்றொன் றாகமாறுகிறது அர்த்தம். நாம் சொல்லுவ தற்கும் ஐரோப்பியர் சொல்லுவதற்கும் என் னவித்தியாசம்? 'ப்ராகிருத்தியபூராத்', பிரகிரு தியை 'சம்பூர்ணம்செய்வித்தலால்' மாறுபாடு உண்டாகிறதென்று நாம் சொல்லுகிறோம். ஐரோப்பியர் சொல்லுவது யாதெனில் முந் திக்கொள்ள வகைதேடுகை, சுபாவத்தி லேயே ஒன்று மற்றொன்றாக மாறவிரும்பு தல், முதலியகாரணங்களால் ஒரு தேகம் வேறொரு உருவத்தையடைகின்ற தென்கிறார் கள். இங்கு இன்னொரு எண்ணம் தோன்று கிறது. அது மிகவும் தெளிவான அன்வயம். "பிரகிருதியைச் சம்பூர்ணம்செய்வித்தல்" என் னும் வசனத்திற்கு நன்றாய் அர்த்தம் தெரிவிக் கிறது. பிரகிருதியைச் சம்பூர்ணம்செய்வித்தல் என்பதற்கு அர்த்தம் என்ன? 'சிறியபுழுவா னது வரவர வளர்ந்து கடைசியாய் 'புத்தர்' என்னும் மகாத்துமாவாகிறது' என்பதை நாம் ஒத்துக்கொள்ளுகிறோம். நாம் இதை ஒத்துக் கொண்டாலும், ஒரு யந்திரத்தை மறுபடி திருப்பிவைத்தாலொழிய ஓரேபக்கமாய் எப் போதும் வேலைசெய்யச்சொல்ல முடியாதென் பதும் நமக்கு நிச்சயமாய்த்தெரியும். அஃது எவ்வித உருவத்தையடைந்தபோதிலும் அதன் சத்துவத்தை மொத்தமாய்ச் சேர்த்துப் பார்த்தால் எப்போதும் ஒன்றாய்த் தானிருக் கிறது. கொஞ்சம் பலம் அல்லது சத்துவம் நமக்கு ஒரு பக்கத்தில் வேண்டியிருந்தால், அதே சத்துவத்தை வேறொரு பக்கத்தில் உப யோகப்படுத்துகிறோம். நாம் வேறு ரூபத்தில் உபயோகப்படுத்தியபோதிலும், இரண்டும் ஒரே அளவாய்த்தானிருக்கின்றன. ஆகையால் 'புத்தர்', மேற் கூறிய மாறுபாடுகளின் உயர்ந் தபதவியாயிருந்தபோதிலும், சிறிய புழுவும் புத்தராகவே இருந்திருக்கவேண்டும். புத் தரானவர் புழுவிலிருந்து வளர்ந்திருக்கிறர். புழுவானது புத்தரைவ அடக்கிக்கொண்டிருந் தது. இப்பிரபஞ்சமானது அளவற்ற சத்துவத் தின் ஒரு தோற்றமாயிருக்கின், பிரபஞ்சம் பிர ளய ஸ்திதியிலிருக்கும் காலத்தில் சத்துவம் மு ழுவதையும் வெளியிற் காட்டாமல் உள்ளடக் கியிருக்கவேண்டும். அது வேறுவிதமாயிருக்க முடியாது. ஆகையால் 'ஆத்துமாமுடிவற்றது' என்று நமக்குத்தெரியவருகிறது. நமது பாதங் களின் கீழ் ஊர்கிற எல்லாவற்றிற்குந் தாழ் மையான புழு முதல், எல்லாரிலும் பெரிய பரமாத்மாக்கள்வரையிலும் ஒவ்வொருவருக் கும் இந்த அளவற்ற சக்தியும், அளவற்ற சுத் தமும், அளவற்ற ஒவ்வொன்று மிருக்கிறது. அவைகளில் வித்தியாசமெல்லாம், வெளித் தோற்றத்தில் தான். புழுவானது அந்தச்சத்து வத்தில் ஒரு சிறியபாகத்தை மாத்திரம் வெளிப்படுத்துகிறது. நீங்கள் அதைக்காட் டிலும் அதிகமாய் வெளிப்படுத்தியிருக்கிறீர்

கள். வேறு தெய்வதத்துவமுள்ள மற்றொருவர் இன்னும் அதிகமாய் வெளிப்படுத்துகிறார். இதுதான் வித்தியாசம். ஆனால் சத்துவம் எல்லாவற்றிலும் ஒரே அளவாய்த்தானிருக்கிறது. பதஞ்சலி என்பவர் "தத:க்ஷேத்திரகாவத்" "ஒரு குடியானவன் தன் வயலுக்கு நீர்பாய்ச்சுவதுபோல" என்று சொல்லுகிறார். அவன் எங்கேயோ ஓரிடத்திலுள்ள தடாகத்திலிருந்து தண்ணீர் கொண்டுவரும்படியாயுள்ள சிறிய குடாக்கை யொன்றை தன் வயலில் வைத்துக்கொண்டிருக்கிறான். அன்றியும் சில வேளைகளில் தண்ணீர் அதிகமாய்த் தன் வயலுக்குள் ஓடிவராமலிருக்கும் பொருட்டு (லாக்கும்) நீர்க்கால் மறிப்பும் வைத்துக்கொண்டிருக்கிறான். அவனுக்குத் தண்ணீர் வேண்டும்போது, லாக்கைத்திறக்க வேண்டியது தான். உடனே தண்ணீர் மிருத்தவேகத்துடன் ஓடிவந்துவிடுகிறது. இந்த வேகம் புதிதாய் ஒருவராலும் சேர்க்கப்படவில்லை. அந்தச்சக்தி தடாகத்தில் முன்னமேயேயிருக்கிறது. அதுபோல நாம் ஒவ்வொருவரிடத்திலும் அப்பேர்ப்பட்ட சக்தியும், அளவற்ற பலமும், சுத்தமும் சந்தோஷமும் அடங்கிய ஒரு களஞ்சியம் இருக்கிறது. நமது தேகங்களாகிய லாக்குக்கள்தான், நமது சக்தியைப்பிரயோகிப்பதினின்றும் நம்மைத் தடுக்கின்றன. இந்தத்தேகங்கள் வரவர அதிகநேர்த்தியாய் ஒழுங்குபடுத்தப்படும் போது, அதாவது ராஜஸகுணம் சத்துவகுணமாகவும், தாமஸகுணம் ராஜஸகுணமாகவும் மாறும்போது இந்தச் சக்தியும் சுத்தமும் அதிகமாகவெளிப்படுகிறது. ஆகையினால் தான் நம்மவர்கள் சாப்பிடுவதிலும் குடிப்பதிலும் ஆகாரவிபவகாரத்தைப்பற்றியும் மிக்கஜாக்கிரதையா யிருந்திருக்கிறார்கள்.

## அறிவைப்பரவச்செய்வதற்கான உபகார சங்கங்கள்.

### ஓர் நல்ல உதாரணம்.

மற்றொரு பக்கத்தில் அணிக்கொறை டிஸ்திரிக்ட் போர்டு ஸ்கூல் சம்பந்தமாய் ஏற்பட்ட 'அறிவைப்பரவச்செய்வதற்கான உபகாரசங்கத்தின்' ரிபோர்ட்டை, கோயமுத்தூர்-நீலகிரி ரேஞ்சு ஸ்கூல்களின் ஸப்-அஸிஸ்டெண்ட் இன்ஸ்பெக்டர் அவர்கள் மூலமாக நமக்குக் கிடைத்தபடி பிரசுரித்திருக்கிறோம். அவ்வுபகாரசங்கம் நன்றாக வேலைசெய்து வருவதாக ஸப்-அஸிஸ்டெண்ட் இன்ஸ்பெக்டர் அவர்கள் அவருடைய 26-4 N. நம்பர் இண்டார்ஸ்மெண்டில் தெரிவித்திருக்கிறார். ஷை அணிக்கொறை ஸ்கூல் ஹெட்மாஸ்டராகிய ஸி. எஸ். அனந்தநம்பியார் அந்த டிவிஷன் டிப்டி தாசில்தார் அவர்கள் மூலமாக கிராமங்களின் மணியம் முனிசீபுகள் இதுவிஷயத்தில் சேர்ந்துழைக்கவேண்டுமென்று கோரிக்கொண்டதும் அதற்கு அவர்கள் இணங்கி உதவிபுரிந்ததும் அதன்பயனாக அனேக கிராமங்களின் மணியகாரர்கள்கூடி கிராமஜனங்களை வழிக்குக்கொண்டுவரும் விஷயத்தில் அறிவைப்பரவச்செய்யும் உபகாரசங்கத்தைச் சேர்ந்தவர்களாக விருந்துழைக்கச் சம்மதித்ததும் சிலாகிக்கத்தக்கதாயிருக்கிறது. அங்கங்கேயுள்ள உபகாரசங்கங்கள் இவ்வுதாரணத்தை மேற்கொண்டு ரெவினியூ அதிகாரிகள் உதவியை நாடி எல்லாருமாய்ப் பொதுவிஷயத்தில் ஒத்துழைக்க வழிதேடுவார்களென்று கோறுகிறோம். உதகமண்டலம் டிப்டி தாசில்தாரவர்கள்செய்த உதவி மற்ற எல்லா தாசில்தார்களும் டிப்டி - தாசில்தார்களும் செய்யக்கூடியதே. தக்கபடி அவர்களையண்டி விண்ணப்பம்செய்துகொள்வோர் வெளிவந்து உழைக்க வேண்டும். இது சம்பந்தமாக தென்னாற்காடு ஜில்லா டிஸ்திரிக்ட்போர்டு பிரெஸிடெண்ட்

அவர்கள் சில தாலூகா போர்டு ப்ரெஸிடெண்டுகளுக்கும் ஸ்கூல் அஸிஸ்டெண்ட் இன்ஸ்பெக்டர் அவர்களுக்கும் எழுதியிருக்கும் கடிதங்கள் சிலாகிக்கத்தக்கனவாக விருக்கின்றன. நமது இராஜதானி சானிடெரி கமிஷனர் டாக்டர் கிங் அவர்களும் நமது முயற்சியை அங்கீகரித்து ஆதரவு செய்தெழுதி யிருக்கிறார்கள். அக்கடிதங்களையும் இப்பத்திரிகையின் கடைசியில் பிரசுரித்திருக்கிறோம். மற்ற ஜில்லாக்களிலும் அதிகாரிகளும் ஸ்கூல் மாஸ்டர்களும் மற்றப் பிரமுகர்களும் இவ்வாறு சிரத்தையெடுத்துக்கொண்டு பொதுவிஷயத்தி லுழைக்க முன்வருவார்களானால் சுகாதார விஷயம் ஒன்றில் மட்டுமன்று மற்ற எல்லா வகைகளிலும் நமது நாட்டுக்குடிகள் முன்னுக்குவந்து விர்த்தியடையஹேதுவுண்டாகுமென்பதற் கையமில்லை சென்னை வித்யா இலாகாத்தலைவராயிருந்து நீங்கிய டாக்டர் டங்கன் அவர்கள் தென்னாற்காடு ஜில்லா டிஸ்திரிக்ட் போர்டு ப்ரெஸிடெண்டவர்கள் விடுத்த கடிதங்களைக்கண்டுச் சந்தோஷித்தவராய் டி. போர்ட் ப்ரெஸிடெண்ட் சிரத்தையோடு எடுத்துக்கொண்ட இவ்வேற்பாட்டால் நன்மை விளையுமென்று எதிர்பார்ப்பதாக வெழுதியிருக்கிறார். சென்னையில் முறையே ஹைகோர்ட் ஜட்ஜாகவும் கௌன்ஸில் மெம்பராகவுமிருந்து பிந்தி இந்தியா கவர்ன்மெண்டில் ஒரு மெம்பராயிருந்து இப்பொழுது லண்டனிலுள்ள இந்தியா கௌன்ஸிலில் ஒரு மெம்பராகவிருக்கும் கனம் ஸர் பிலிப் ஹட் சின்ஸ் அவர்கள் நாம் செய்துவரும் வேலையில் அனுதாபமுற்றவராகக் காட்டியிருக்கிறாரென்று தெரியவருகிறது. இவர்களுடைய அனுதாபமும் ஆதரவும் நம்மவர்கள் அங்கங்கே சிரத்தையோடு உழைத்து வருமளவுக்கு அவர்களை உற்சாகப்படுத்தக் காரணமாகுமேயன்றி மற்றப்படி நம் தலைப்பாரமாயிருக்கும் கடமையைக்குறைக்கப் பிரயோஜனப்படமாட்டாது. பொது விஷயத்துக் குழைப்பவர்கள் தெய்வப்பிரீதியார்த்த முழைப்பதே மிக மேலான உழைப்பாம். தெய்வப்பிரீதிக்குப்பின் நல்லவர்கள் பெரியவர்களின் அனுதாபமும் அங்கீகாரமும் நம்மை அவ்வழியில் மேன்மேலு முழைக்க உற்சாகப்படுத்தும் ஓர் ஹேதுக்களாம். எவ்வித எண்ணத்திலும் மேற்கண்ட இந்த எண்ணமே மிகமேலான எண்ணம். இகம்பரமிரண்டிலும் நம்மைக் காப்பாற்றிக் கரையேற்றத்தக்க மரக்கலம் நிஷ்காம்ய கர்மமேயாம். அதாவது தெய்வப்பிரீதியார்த்தம் பொதுநன்மைக் குழைப்பதாம்.

---

**திருக்காட்டுப்பள்ளி உபாத்தியாயர் சங்கம்:—**

இச்சங்கத்தார் ஜூன்மீ 2உ கூடிய கூட்டத்தில் சேர்மான், வைஸ் சேர்மான் உள்பட 27-மெம்பர்கள் ஆஜராயிருந்தார்கள். இச்சங்கத்து மெம்பர்கள் தொகை மொத்தம் 38. இம்மீட்டிங்கில் "பிறனில்விழையாமை" யென்னும் விஷயமாய் முருகைய வாத்தியார் ஒரு உபந்யாசம் எழுதி வாசித்தார். அடுத்த மீட்டிங்கு அடுத்தமீ முதல் ஞாயிற்றுக்கிழமையன்று கூடும்படி வைத்துக்கொண்டிருக்கிறார்கள்.

---

# சிறுவர்க்கான பக்கம்.

[விவேகசிந்தாமணியை வாசிக்கும் சிறுவர் சிறுமிகளுக்காக எழுதப்பட்டது.]

---

## மூடனுக முயலக்கூடாது.

ஜெயபுரி யெனப் பெயர்கொண்ட இராஜ்யமொன்றுண்டு. அதனை சுதர்மன் என்னும் அரசன் செங்கோலோச்சி வருவானாயினன். இப்படி அவன் இராஜ்யபரிபாலனம் செய்யும் அந்நாட்டில் அழகிய பொன்னிறமான வெயில் தாழ்ந்து பிரகாசிக்கும் சாயங்காலவேளையில்

ஒருநாள் மூன்று அலங்கார புருஷர்கள் தங்களை ஒன்றாய் உடுத்திக்கொண்டு உலாவச் சென்றனர். அத்தருணம் "பொன்னி" என்று பெயர்கொண்ட அவ்வூர்த் தாசிப் பெண்ணானவள் இம் மூவருடைய அலங்கார நடையுடை பாவனைகளைக் கண்டு தனது மைதீர் விழிகளால் சுழட்டி, வணங்கி ஒதுங்கி கையில் பச்சை மோதிரங்களும் வைர மோதிரங்களும் டால்வீச, நிலுவாபரணங்களும் அங்கத்தில் துலங்கிப் பிரகாசிக்க இடையிலுடுத்திய தனது பனாரிஸ் பட்டுச்சேலையில் சொருகியிருந்த கைக்குட்டையைக் கையில் பிடித்தவண்ணமாய் ஒரு கும்பிடுபோட்டுச் சென்றனள்.

தற்பெருமையில் அனேகர் ஜம்பப்பேர்வழிகளாயிருக்கிறார்கள். தன்னை யெல்லோரும் வணங்கிப் புகழவேண்டும்; தன் வாக்கைத் தெய்வவாக்காகப் பாவிக்கவேண்டும்;—என்று மனக்கோட்டைகட்டி கோழிக்கனாக்காண்போருண்டு. அப்பேர்ப்பட்டவர்களைத் தோல்வியடையச்செய்து தற்பெருமையில் முன்னிற்கும் இம் மூவர்களுக்குக் கேட்பானேன்!

சென்ற மூவரில் ஒருவன் புன்சிரிப்புடன் முகமலர்ந்தவனாய் தன் பக்கலில் வருபவனை நோக்கி "இவளார் தெரியுமா, உனக்கு?" எனப் புருவத்தை நெறித்துக்கொண்டு கேட்டனன். அதற்கு மற்றொருவன் "யாராயின் நமக்கென்ன? கும்பிடுமாத்திரம் எனக்குப் போட்டாள்?" என்றனன். இதைக்கேட்டதும் முதலாவன் முகம் சிவந்தது. "எனக்குத் தான் கும்பிட்டாள்" என்றனன். இன்னொருவன் "அடபேயா! பைத்தியமோ? எனக்கல்லவா கும்பிட்டது." என்றனன். உடனே ஒருவர்க்கொருவர் அம்பட்டனுக்குக் கொடுக்க அரைக்காசு செலவின்றி மயிர்பிய்த்துக் கொள்ள எத்தனித்தனர்.

இதனைக்கண்ட காவற்காரர்கள் நேரே அரசனது சொலுக்கூடத்திற்கு இம் மூவரையும் அழைத்துச்சென்றார்கள். அரசன் சங்கதிகளையறிந்து ஆச்சரியமடைந்தவனாய் "ஒரு தாசி கும்பிட்டதற்கு இவ்வளவு கலகம்!" என யோசனைசெய்தவனாய் காவற்காரனை அத்தாசியை அழைத்துவரப் பணித்து, அவள் வந்ததும் "ஏ! பரத்தையே! இம் மூவரில் நீ யாரைக்கண்டு கையெடுத்துக் கும்பிட்டாய்! உண்மையைச் சொல்" என அரசன் வினவ அவள் புன்சிரிப்புடன் "மஹாராஜ! இதில் யார் முட்டாளோ, அவர்களைக்கண்டு கையெடுத்துக் கும்பிட்டேன்" என மொழிந்தனள். உடனே ஒருவர்க்கொருவர் "நான் முட்டாள், நீ முட்டாள்" என அடித்துக் கொண்டனர். அரசன் குலுங்க நகைத்து அம் மூவரையும் அப்புறம் செல்லப்பணித்தனன். ஆதலால் நாம் "முட்டாள்களில் முதற்றூம்பூலம்" பெறப்போட்டிபோடாமல் பொது ஜனோபகாரமும் பரோபகாரமுமான விஷயங்களில் முன்னின்றால் பேருங்கீர்த்தியும் அடையலாம். அதை அடைவோமாயின் இறந்தும் இருந்ததொக்கும். சுபம்.

K. S. வைத்திநாதய்யர்.

---

டிஸ்திரிக்ட் போர்டு இஸ்கூல், அணிக்கோறை அறிவைப்பரவச் செய்வதற்கான உபகாரசங்கம்.

---

1. நீலகிரி றேஞ்சு, சப்-அஸிஸ்டாண்டு இன்ஸ்பெக்டராகிய, ம-ா-ா-ஸ்ரீ, சிவராமையர் அவர்களால் 21-5-01-ல் ஒத்தகைமந்து, பஜார், முனிசிப்பல், இஸ்கூலில் கூடப்பட்ட உபாத்தி சங்கத்தில் தீர்மானித்தபடி, கிராமங்களில், அறிவைப்பரவச்செய்யும் பேருபகார சங்கத்தை ஏற்படுத்தவேண்டிய விஷையத்தில், கிராம அதிகாரிகளான, மணியகாரர்கள் இச்சங்கத்துக்கு முதன்மையாயிருந்து தக்க உதவி புரிந்து, மணியகாரர்களால், தங்கள் குடிகள் சொஸ்தமடையும்படியான, நல்வழிகளை போதிக்கவேண்டியிருப்பதால், ஷை மணியகாரர்கள், இவ்விஷயத்தில் நல்மனதுடன் உடன்பட்டு, இக்காரியங்களை தவறாமல்

நிறைவேற்றும்பொருட்டு, ஒவ்வொருவருக்கும், தாக்கீது அனுப்பும்படி, ஒத்தகைமந்து டிப்டி தாசில்தார், ம-ா-ா-ஸ்ரீ, சீதாராம அய்யர் அவர்களைக்கேட்டதில், தீர்க்காலோசனைசெய்து, இப்பேருபகார விஷையத்தைவிர்த்தியாகும் பொருட்டு, நல்மனதுடன், தனது நற்குண, நற்செய்கையும், தீனதயாளமும், பரோபகார சிந்தையும் நீட்சிபெறும்பொருட்டு கூடியதுரிதமே, மணியகாரர்களுக்கெல்லாம், நல்வழியில் ஒழுகும்படியான, தாக்கீதளித்துக் கோரிக்கை நிறைவேற்றினர்.

2. தாசில்தார் அவர்கள், முதல்தடவையிலேயே, தமது உள்ளன்பும், பேருபகார சிந்தையும், வெளிப்படுத்தினதை யோசிக்கின், வரவர இப்பேர்ப்பட்ட நல்விஷையத்தை விருத்திசெய்ய, தன்னுவியன்ற, முயற்சியுடன் உதவிபுரிந்துவருவார் என்பதற்கையமில்லை. ஆனதுபற்றி, ஷை யாருடைய பரோபகார மனதிற்கும், நற்குணத்திற்காகவும், மென்மேலும் வந்தனம் புறிந்தேனக.

3. மேலும், 1901-ம்ஞு ஜூன்மீ 23உ ஞாயிற்றுக்கிழமை தினம் காலை 11-மணிக்கு அணிக்கொறை, டிஸ்திரிக்ட் போர்டு இஸ்கூலில், அடியில் கண்டவர்கள் கூடினதில், ஷை பள்ளிக்கூடத்தின் உபாத்தியாயராகிய, என்னால் (கிராமபரிபாலன ஏற்பாடைப்பற்றி அந்தந்த கிராம மணியகாரர்களே உத்திரவாதிகளென்றும், இவர்களே, கிராமத்தைச் சீராய் பரிபாலிக்க வேண்டியவர்களென்றும் குடிகளை தீயொழுக்கத்தைவிட்டு நல்லொழுக்கத்திர்க்கொண்டுவர வேண்டியவர்களென்றும், பேரிதிக்கப்பட்டது. இஃது முதல்தடவையானபடியால் தான், கிராமமணியகாரர்களின் கடமை இவ்விதமென வற்புறுத்தலாயிற்று.

4. போதித்த விஷயத்தைக்குறித்தும், நடக்கவேண்டிய விஷயத்தைக்குறித்தும், அபிப்பிராயம் கேட்டதில், கூடினவர்கள், படுகமணியகாரர்களும், இதரக்குடிகளுமானதால், வழங்கும் பாஷையின் நடையைச்சீராய்ப்பழகாத் விஷயத்தில், தங்கள் அபிப்பிராயங்களை, ஒருவாறாய் வெளியிட்டார்கள்.

5. அஃது யாதெனில் இச்சங்கம் கூடும் விஷயத்திலும், விஷயபோதனையிலும், முறைப்படி நடத்த வேண்டிய விதம் தங்களுக்கு அப்பியாசமில்லாததால், அணிக்கொறை உபாத்தியாயராகிய என்னையே, இதற்குத்தலைமையாயிருந்து நடப்பிக்கவேண்டுமெனவும், போதிக்கப்படும் நல்விஷயத்தின்படி தாங்கள் நடப்பதாகவும், இதற்கு முன் இப்படிப்பட்ட சங்கம் கூடாததைப்பற்றி வியசன்முறுகிறோம் எனவும் வெளியிட்டார்கள்.

6. இச்சங்கத்தில் கூடியிருந்தவர், மணியகாரர்களும், குடிகளில்ச்சிலரும், நான்காம் வகுப்புப்பிள்ளைகளுமேயாம். ஞாயிற்றுக்கிழமை காலை 11-மணிக்கு கூடப்பட்டு மாலை 2-மணிக்கு சங்கம் கலைந்தது.

இப்படிக்கு,
**பி. எஸ். அனந்த நம்பியார்,**
உபாத்தியாயர்,
டிஸ்திரிக்ட் போர்ட் ஸ்கூல்,
அணிக்கொறை.

இதுவரையில் இச்சங்கத்தில் சேர்ந்தவர்கள்.

1. அணிக்கொறை, மணியம், லிங்கேகவுண்டர்.
2. தூனேரி, முன்சீப் மணியம், ஜோகிகவுண்டர்.
3. கடனாடு, மணியம், கிருஷ்ணகவுண்டர்.
4. எப்பனாடு, மணியம், பெள்ளேகவுண்டர்.
5. ஹோரிதிப்பேகவுடன்.
6. தாறேகவுண்டர்.
7. மொள்ளெச்சிவனகவுண்டர்.
8. உச்சிகவுண்டர்.
9. 4-வது வகுப்பு பிள்ளைகள் 9-பேர்.

இவர்களும், குடிகளில் சிலருமிருந்தார்கள்.

*Endorsement by the Sub-Assistant Inspector of Schools, Coimbatore & Nilgiris Range,*

*R.* No. 264 N. / 2—7—01.

"Forwarded to the Editor of the *Viveka Chintamani* for favour of inclusion in his Journal. The Association is reported to be doing good work."

## திருச்செங்கோடு உபாத்தியாயர் சங்கம்.

1901ம்ளூ ஜூலை மீ 8உ திருச்செங்கோடு லோயர் செகண்டெரி பாடசாலையில் ஓர் சங்கம் கூடப் பட்டது.

அச்சமயத்தில் இருந்தவர்கள் :—

நாமக்கல் ரேஞ்சு சப்-அஸிஸ்டெண்டு இன்ஸ்பெக்டர்.

ம-ா-ா-ஸ்ரீ, ஆர். சிவராமய்யர் அவர்கள் அக்கிராசனாதிபதி.

,, இராகவேந்திரராவ் அவர்கள்.

,, வி. எஸ். சுவாமிநாதய்யர் அவர்கள்.

,, எம். இரங்கசாமி அய்யங்கார்.

,, கே. வெங்கிடகிருஷ்ணய்யர் அவர்கள்.

,, டி. எஸ். வெங்கடரமணய்யர் அவர்கள்.

,, க. ஆர். விருத்திகிரி அய்யர் அவர்கள்.

,, எம். குப்புசாமி அய்யர் அவர்கள்.

,, ராமசாமி பிள்ளை அவர்கள்.

,, லோகையா அவர்கள்.

,, சுவாமிநாதமுதலி அவர்கள்.

மேலும் ஷை பாடசாலையில் வாசிக்கும் உயர்ந்த வகுப்பு மாணாக்கர்களும் இருந்தனர்.

ஷை சபை கூடியகாலத்தில் செய்யப்பட்ட தீர்மானங்களாவன ;—

(1) ஷை சங்கத்திற்கு உபாத்தியாயர் சங்கம் (Teachers' Assosiation) என்று பெயர் வழங்க வேண்டியது.

(2) மாத மொருமுறை இச்சங்கம் கூடவேண்டியது.

(3) இச்சங்கத்திற்கு லோயர் செகண்டெரி பாடசாலை தலைமை உபாத்தியாயர் ம-ா-ா-ஸ்ரீ, வி. எஸ். சுவாமிநாதய்யர் அவர்கள் அக்கிராசனாதிபதியாகவும், ம-ா-ா-ஸ்ரீ, ரெங்கசாமி அய்யங்கார் காரியதரிசியாகவும், ஷை பாடசாலை மற்ற உபாத்தியாயர்களும் ரிசல்ட் பாடசாலை உபாத்தியாயர்களும் மெம்பர்களாகவும் இருக்கவேண்டியது.

(4) இச்சங்கத்தில் சேர இஷ்டமுள்ளவர்கள் எவரும் மெம்பர்களாக அங்கீகரிக்கப்படவேண்டியது.

(5) ஷை சங்கம்கூடிய தினந்தோறும் கல்வி விஷயத்தைப்பற்றியாவது சுகாதாரவிருத்தியைப்பற்றியாவது பொது நன்மையைக்குறித்த வேறெவ்வித விஷயத்தைப்பற்றியாவது ஓர் உபந்நியாசம் கொடுக்கப்படவேண்டியது.

முதல்முதல் கூடின இச்சங்கத்திற்கு ம-ா-ா-ஸ்ரீ, ஆர். சிவராமய்யர் அவர்கள் அக்கிராசனாதிபதியாக அங்கீகரிக்கப்பட்டனர்.

ஷையார் அனுமதியின்பேரில் இரங்கசாமி அய்யங்கார் சுகாதார ஏற்பாடுகளால் உண்டாகும் நன்மையைப்பற்றி ஓர் உபந்நியாசம் செய்தனர். ம-ா-ா-ஸ்ரீ, சிவராம அய்யர் அவர்கள் ஷை உபந்நியாசத்தினால் உவப்படைந்து அது விஷயத்தில் இன்னும் சிலவற்றை தெளிவாகச்சொல்லி கேட்டோர் மகிழ்ச்சி யடையச்செய்ததுமல்லாமல் இச்சங்கத்தினாலுண்டாகும் பெருநன்மை இன்னவை என்பதையும் விளக்கிக்காட்டினர்.

அக்கிராசனாதிபதிக்கு அளிக்கப்பட்ட வந்தனத்துடன் இன்று இச்சபை கலைந்தது.

இராமசாமி அய்யங்கார்,
காரியதரிசி.

## THE BRIDE'S TRIUMPH.

## வதூவிஜயம்.

(18-ம் பக்கத் தொடர்ச்சி.)

### இரண்டாங்களம்.

நிகழ்விடம்—படிக்கும் அறை.

காலம்—இரவு ஒரு நாழிகைப்பொழுது.

[தான் வழக்கமாய்ப்படிக்கும் அறையில், சேஷு, கோவிந்தசிவன் என்னு மிரண்டு சிறுவர்களுடன் கூட உட்கார்ந்து அநந்தன் மேஜையின்மீது விளக்கைவைத்துக்கொண்டு ஒரு புஸ்தகத்தை வாசிக்கின்றான். அவனது மாமனும் லக்ஷ்மியின் தமயனுமாகிய பஞ்சாபகேசனும் ஒரு பக்கமாய் உட்கார்ந்து ஒரு புஸ்தகத்தைப் பார்த்துக்கொண்டிருக்கிறான். ஆநந்தவல்லியை அவளுடைய வீட்டில் விட்டு லக்ஷ்மி திரும்பி வந்து இவ்வறையினுள் புகுகின்றாள்.]

லக்ஷ்மி.—அநந்தா! என்னவாசிக்கின்றனை?

அநந்தன்.—உவாத்தியார் இங்கிலீஷ் ரீடரில் ஹோம்லெஸ்ஸன் கொடுத்திருக்கிறார். அதைவாசிக்கிறேன்.

ல.—அண்ணா! நீ என்னவாசிக்கின்றாய்?

பஞ்சாபகேசன்.—என்னத்தை வாசிக்கிறது? இன்னும் எக்ஸாமினேஷன் ரிஸல்டு வரவில்லை. ஆனால் பாஸ் பண்ணுவேனென்கிற தைரியம் எனக்கு இருக்கிறது. தமிழில் மாத்திரம் 'மினிமம்மார்க்ஸ்' வந்துவிட்டால் மற்றப்படி 'டோடல்' எப்படியாவது 'மேக்அப்' செய்துவிடுவேன். அதுதான் கொஞ்சம் சந்தேகம். இந்த வருஷம் பி. ஏ-க்கு 'ஹாம்லெட்' பாடம் வைத்திருக்கிறார்களாம். எக்ஸாமினேஷன் ரிஸல்டு அநுகூலமாயிருந்தால் அதைப்படிக்கவேண்டுமே, அதன் கதையைத்தெரிந்துகொள்வோமென்று 'லாம்ஸ்டேல்ஸ்' வாசிக்கிறேன்.

ல.—ஆங்கிலத்தின் பொருட்டாகம் மருந்தமிழை யொழித்தலிவண்
ஓங்குமதி யுடையவண்ணா வுளத்துன்னிலறமேயோ
பாங்குடையவன்னையினைப் பன்னிமனங் களிபூப்பத்
தீங்கடைய வேதுரக்குந் தீயனெனச் செப்புவரால்.

ஆஹா! நன்றாயிருக்கின்றது! நீபேசியது மூன்றுவாக்கியம், அதனில் முப்பது இங்கிலீஷ்ச் சொற்களா? நீ என்னுடன் பேசிய பாஷையாது? அஃது ஆங்கிலமோ, தமிழோ, அன்றி, ஆங்கிலத்தமிழோ? இது நீபரீக்ஷையில் தேறும் குறியாயிருக்கவில்லையே? உங்கள் பாடசாலையில் தமிழ்ப்புலமை நடாத்துநர் ஆங்கிலத்திலும் பட்டம்பெற்றவராயிருப்பதனால், அவர் தமது மாணாக்கர்களுக்கு நற்புத்தியூட்டி, தம்மைப்போல் அவர்களுக்கும் ஸ்வதேச பாஷையில் அபிமானமும் பயிற்சியும் உண்டாமாறு செய்வரென்று நம்பியிருந்தேன். ஆங்கிலமுணராத திராவிடபண்டிதர்களால் பண்டைநாள் பள்ளிப்பிள்ளைகள் ஏமாற்றிப் பாடம் படியாது தமிழை மறந்து வந்த வழியிலேயே நீங்களும் இருக்கிறீர்களே? ஆங்கிலமும் திராவிடமும் அறிந்தவர்களுக்குச் சம்பளம் அதிகமாகக்கொடுத்து அவர்களைத் தமிழ்ப்பண்டிதர்களாய் நியமிப்பதன் பயன் என்னவாயிற்று? தேசபாஷையை அபிவிருத்தி செய்யவேண்டாமா? நம் நாட்டில் எல்லோரும் இங்கிலீஷே வழங்குவது அசாத்தியம். அன்றியும், தேசபாஷையைக்கற்று அதனைப் பிரகாசிக்கச்செய்வது தேசத்திற்குச் சிறப்பு. பிறபாஷைகளையுங் கற்று அவற்றின் நல்ல அம்சங்களைத் தேசபாஷையிற் சேர்த்து அதனுருவத்தை மாற்றாது சிறப்பிப்பதே அழகு. இதனைவிட்டு, கும்பகோணத்திலுள்ள மாமாவுக்குக் கடிதமெழுதச் சொன்னால் தமிழிலெழுதாமல் முன்னாள் நீ இங்கிலீஷில் எழுதினையே; உன் புத்தியை என்னவென்று கொண்டாடுவேன். நமது வழக்கத்திற்கும் ஒழுக்கத்திற்கும் இயைந்த அபிப்பிராயங்களை நமது பாஷையில் வெளியிடுவது எத்தனை யெளிது! போகட்டும், இங்கிலீஷிலாவது நன்றாய்;—

பஞ்சா.—நீ சொன்னதையே சொல்லவையே. நான் இங்கிலீஷிற் கடிதமெழுதுவது தப்பிதமென்பது ஒருவாறு இருக்கட்டும். தமிழின் மீது மிகுந்த அபிமான முள்ளவரென்று நீ துதிக்கின்ற எங்களது தமிழ்ப்பண்டிதர் சென்ற வாரத்தில் மஞ்சக்குப்பத்திலுள்ளவ ரொருவருக்கு இங்கிலீஷில் ஒரு கார்டு எழுதி என்கையிற் கொடுத்துத் தபால் பெட்டியிற்போடச் சொன்னாரே. இதற்கென்னசொல்லுகிறாய்? மஞ்சக்குப்பத்துக்காரரும் அவ்வூர்ப் பாடசாலையில் தமிழ்ப்பண்டிதரே யென்று மேல்விலாசத்தினால் அறிந்தேன். ஒரு தமிழ்ப்பண்டிதர் மற்றொரு தமிழ்ப் பண்டிதருக்கு இங்கிலீஷிற் கடிதமெழுதுகிறார். இது தான் எங்கும் வழக்கமாயிருக்கிறது. உன்பயித்தியத்திற்கு நான் என்னசொல்வேன். நான் மாத்திரம் ஒரு காரியம் செய்தாலன்றோ தப்பிதம். எங்கள் உவாத்தியாயரே அங்ஙனம் செய்யும்பொழுது என்மீது குற்றமேது?

ல.—உங்கள் உவாத்தியாயரையே இங்கிலீஷிற் கடிதமெழுதுவது நலமா, தமிழிலெழுதுவீது நலமா வென்று நீ கேட்டால், அவர் உனக்குப் புத்திசொல்லுவார். அவர் இந்த விஷயத்தைக் கவனியாதது பொது வழக்கத்தை யனுசரித்து இங்கிலீஷிற் கடிதமெழுதியிருப்பார். நீ இந்தக்கேள்வி கேட்டவுடன் அவர் கவனிப்பார். ஆதலின் இனி அவரும் பிறபாஷையிற் கடிதமெழுதார்.

பஞ்சா.—நன்று, அவ்வாறே செய்வேன். ஆயின் அவரை நான் காணுமுன் அவர் எனக்குக்கொடுத்திருக்கும் பாடத்தைப்படிக்க வேண்டுமே. அஃது இப்பொழுதுதான் ஞாபகம் வந்தது. அது 'சீவகசிந்தாமணி'யிலொருபாகம். அதனை யெடுத்து வாசிக்கிறேன்.

(புஸ்தகத்தையெடுத்து மெதுவாய்த் தன் வாய்க்குள் வாசிக்கின்றான்.)

ல.—துராப்பியாச புஞ்சமே! உன்னிடத்து எல்லாம் அவலக்ஷணமேதானா? வாய்க்குள் மந்திரம் ஜபிக்கின்றனையோ? புஸ்தகம்படிக்கும் முறை இதுவாகாது. உரக்கப் படிக்கவேண்டும். கைகால் முதலிய அவயவங்களுக்கு அவற்றை நன்றாயுபயோகிப்பதனால் எங்ஙனம் பயிற்சியுளதோ, அங்ஙனமே உரக்கப்படிப்பதனாற் கண்டத்திற்கு நற்பயிற்சியுண்டாகும். நீ தப்பிதமாகப்படித்தாலும் கேட்பவர் உன்னைத் திருத்துவதற்கிடமுண்டு. நீ படிப்பது தப்பிதமென்று உன் காதுக்கேயும் படுதல் கூடும். நன்றாய்வாசிப்பது ஓர் சிறந்தவித்தை; அதனாற் கேட்பவரைச் சந்தோஷப்படுத்தலாம். வியப்பு, விசனம், நயம், பயம், களிப்பு, சோகம், மோகம் முதலியவைகளை உணருந்தன்மையும், இவ்வுணர்ச்சிகளைப் பிறருக்கு எடுத்துக்காட்டுந் திறமையும் உரக்கவாசிப்பதனால் அமையும். 'பாடப்பாடக் குரல் இனிமைப்படும்' எனும் வழக்கச் சொல்லையுங் கேட்டிலையோ? பொழுது போகாதகாலத்துச் சிறுவரை வாசிக்கச் சொல்லி அதனைக் கேட்டுப் பெரியோர் ஆனந்தமாய்க்காலங்கழிப்பதை யறியாய் போலும். ஆங்கில தேசத்துப்பெண்கள் பலருக்கு இனியகுரல் அமையாததைப் பற்றி அவர்கள் தாம் சிறுவராயிருந்த காலத்து உரக்கவாசித்து வழக்கப்படுத்தாததோஷத்தின் பயனெனச் சிந்திக்கின்றார்கள். அவர்களிற் சிலர் சபைக் கோழையாயிருப்பதற்குங் காரணமிதுவேயாம். உரக்கவாசிப்பதனால் அந்தத் தொனியின் விசேஷமாகப் பல நோய்கள் வாராதொழிகின்றன; உள்ளநோய்கள் பலவகலுகின்றன; ஸ்வாஸாசயம் உறுதிப்படுகின்றது; புசித்தவன்னம் நன்றாய் ஜீரணமாகின்றது; புளித்த ஏப்பம்வாராது. ஆகையால் நீ இனி உரக்கப்படிப்பாய்.—(மற்றைப்பையன்களைப்பார்த்து) நீங்கள

ஏன் அப்பா சும்மா இருக்கிறீர்கள்? வாய்க்குள் வாசிப்பதாகப்பாவனை செய்து உண்மையாய் உறங்குகின்றீர்களே. உரக்கவாசித்தால் உறக்கம்வருமோ?

எதே படிப்பதுபோ லேனோ நடிக்கின்றீர்
போதோ கழிந்ததுவாற் போதுநீர் வாய்க்குள்ளே
யோதும் வழக்க மொழிமின் னுயர்குரலிற்
பேதுற் றலமருவீர் பேணிப் படிப்பீரால்.

அநந்தா! நீ அந்தச் சீவகசிந்தாமணியை வாசி, சற்றுக்கேட்போம்.

(அநந்தன் வசந்தகால வர்ணனையை வாசிக்கின்றான்.)

ல.—நன்று, அந்த இளவேனில் வர்ணனையைக் கேட்டமாத்திரத்திலேயே மனமெழுகின்றது. இளவேனிலின் இனிமையே இனிமை. அநந்தா! நீ இன்று காலையில் தோட்டத்திற்குப்போய் வந்தனையே. இங்கு வர்ணிக்கப்பட்டிருக்கிற சிறப்பை நீ கண்ணுற்றுக் குதிகொண்டனையோ? நீ கண்டதைச்சொந்தமாய் ஒரு பாடலினால் வர்ணித்துச்சொல்லு பார்ப்போம்.

பஞ்சா.—தமிழென்றால் தலைவலியுண்டாகிற எனக்குக்கவனசக்தியு முளதோ? கிளாஸில் தமிழ் லெஸ்ஸன் என்றால் ரீஸெஸ் அவருக்குச் சமானம். தமிழ் முன்ஷியைக்கண்டவுடன் பையன்கள் விளையாட்டுக்கு ஆரம்பம். ஆனால் இப்பொழுது கிராடுயேட் தமிழ்ப்பண்டிதர்கள் வந்தபிறகு இது சற்றுக்குறைவு. ஐயாவைக்கண்டாற் பையன்களுக்குக்கொண்டாட்டமாயிருந்தது இப்பொழுது ஒருவாறு அடங்கிற்று. சிறிதுகாலமாகத்தான் பையன்கள் தமிழ் லெஸ்ஸன் நடக்கும்போது கிளாஸில் தங்குகிறார்கள். பைபில் லெஸ்ஸனுக்கு இரண்டாவது தமிழ் ஐயாவின் 'அவர்.' ஆகஃவ தமிழில் எனக்குள்ள அற்ப அறிவைக் கொண்டு அந்த மனோகரமான காட்சியை யென்னவென்று வர்ணிப்பேன்? தனது குமாரனாகிய ரஸால விருக்ஷ (மாமர)த்தோடு வஸந்த லக்ஷ்மியானவள் கூடிக்கிரீடித்துக்கொண்டிருப்பதைப் பார்த்துப் பார்த்து மிகவும் ஸாதுஸ்வபாவமுள்ள பூதேவியானவள் முகமலர்ந்து அகங்களித்து ஆனந்தித்து நின்றாள். இது வெகு ரம்மியமாயிருந்தது. எனக்கு விந்தையாயுமிருந்தது.

வசந்த நாயகி தன்னைமா மரமுத ஸவையு
மிசைந்து கூடியே யெய்தரு மின்பமுற் றன்றே
பசந்து தோற்றுமாத் தனையைப் பார்மக ளோக்கிக்
குசஞ்செய் பண்டிபும் பாக்கிய மெனக்களி கொண்
டாள்.

ல.—நன்றாகவருணித்தனை. வெகு ஆநந்தமாயிருக்கின்றது. நீ ஆச்சரியப்படுவானேன்? உலகிலுள்ள மாமிமார்களனைவருமே மருகியரைக்கண்டு துன்புறுவரோ? தான் பெற்ற பிள்ளைக்குத் தகுந்தவாறு குணவதியான ஸதியகப்பட்டதைக் கண்டு சில துஷ்ட ஸ்திரீகள் தவிர மற்றைத் தாய்மார்களெல்லோரும் உண்மையாய் மனம் பூரித்துச் சந்தோஷப்படாதிருப்பரோ?

அந.—உனக்குப் பாட்டியின் ஞாபகம் வந்தாற்போலிருக்கிறது. அவளைத்திட்டுவதற்கு உனக்கு நல்லசமயம் வாய்த்தது. மருகியின் மீது துவேஷம் துஷ்ட ஸ்திரீகளுக்குத்தான் உண்டாகுமென்று இவ்வாறாக அவளைத்துஷ்டையென்று எல்லோரும் கேட்கச்சொன்னாயே. இஃது அவள் காதிற் பட்டால் உன்குடலைக் கொட்டுவளே. என்னையுஞ் சேர்த்துப் பாடத்தலைப்படுவளே. நீ முன்பின் பாராமல் உள்ளதையுள்ளபடி சொல்லிக்கொளுத்துகிறையே.

அகிலாண்டம்.—(திரையினுட்புறத்திருந்து) அடே! அடே! பயலே! நீயும் அந்தக்காளியோடே சேந்துகிண்டயா? சாளிக்குப் பொறந்தது கூளியாகுமா? அந்த நாசமுத்துப்போறவள் எதைச்சாக்கிட்டு என்னை வையுவ மின்னுகாத்துக்கிண்டிருக்கா

நீ அவளுக்கு எடுத்துக் குடுக்கிறயோ? ஒன்தலேலே சாணுத்தைக்கரைச்சுக் கொட்டறேன் இரு. ஒனக்கென்னகேடு காலம்? இதோவரேன்பாரு.

அந.—(தாயைப்பார்த்து) அம்மா! அந்த சாளகண்டி வெறும்வாயையே மெல்லுவள். 'துஷ்டை' யென்று நீ இரைந்து சொன்னபோதே நான் இதற்குத்தான் பயப்பட்டேன். அவள் வாயிலகப்பட்ட பிறகும் பிழைப்பதுண்டோ? அவள் தாத்தாவையே தூக்கியெறிந்துபேசுகிறாளே, உன்னையுமென்னையும் விடுவளோ? நாம் அவளுக்கு எம்மாத்திரம்?

ல.—குழந்தாய்! இரண்டு கையையுங்கொட்டினாலன்றே சத்தம்? நாம் பேசாமல் ஒதுங்குவோம். அவள் கூவிக்குலைக்கிறபடி குலைக்கட்டும். நீயுன்பாடத்தைக் கவனி. நான் போகிறேன். இவளுக்குச்சமாதானஞ்சொல்வது யாரால் இயலும்? குற்றமுள்ளநெஞ்சு அவளுக்குக் குறுகுறுக்கின்றது. நான் என்னசொன்னேன்? ஏதோ லோகாபிராமமாய் துஷ்ட ஸ்திரீகளுக்குத்தான் மருகியரைக்கண்டால் ஆகாது என்று நாம் பேச்சுடன் பேச்சாய்ச் சொல்லிக்கொண்டிருந்தால் இவளுக்கென்ன? அவளுக்கு யார் பதில் சொல்லுவர்? நான் போகிறேன்.

அந.—அம்மா! இது இம்மட்டோடு நில்லாது. அவள் இதை விடமாட்டாள். தாத்தா வந்தவுடன் அவருக்குத் தூபம் போடுவாள். அவர் பேசாதிருந்தால் கவ்வென்று வீழ்வள். அப்பா கிளப்பிலிருந்து வருவதற்கு முன்னேயே அவனை ராஜிப்படுத்திக்கொள். இல்லை யெனின் அவள் அனர்த்தம் விளைவிப்பள்.

ல.—வந்ததெல்லாம் வரட்டும், நான் அவள் வழிக்குப் போகவில்லை; அவள் வேண்டியதைச் சொல்லிக்கொள்ளட்டும்.

(முன் செல்லுகின்றாள்).

(மாமியரீர் குழந்தையை யழைத்துக்கொண்டு பிரவேசமாகின்றாள்).

அகிலா.—அடி எச்சுமீ! நில்லடி நில்லு. வையாத்தை வசுப்பிட்டுப் போவையாக்கும்? நீ என்னமா என்னைத் துஷ்டையின்னு சொல்லுவே? பிள்ளைக்குக் கத்துக்குடுக்கிறையோ? இதுதானு நீ அவனுத்துப் பாடம் சொல்லறது? உனக்கு வாய்கொழுப்பெடுத்துப்போச்சு அப்பப்போ வெளக்காமாத்தாலே அடிச்சிக்கிண்டிருந்தாத்தான் சரியாயிருக்கும். நீ அடங்காப்பிடாரியாய் ஒண்ணு சொன்ன ஒம்பது சொல்லிக்கிண்டு திரியராப்பலே பிள்ளைக்கும் பழக்கிறையாக்கும். சாமாவரட்டுஞ் சொல்றேன். ஒனக்கு அத்தனை ஆழ்மையா? இன்னிக்கு இரண்டிலோ ஒண்ணு பாத்துடத்தான் போ'றேன்....நான் போரேன் என் பொண்ணுத்துக்கு. எனக்கென்னவேண்டிருக்கு. எங்கேயிருந்தாலும் இத்தனை சோறு.

அந.—பாட்டி! நீ அப்படிப்பண்ணுகிறது தான் நலம். கலகம் அற்றுப்போம். உண்மையாய் நீ அப்படிச்செய். செய்கிறவர்கள் சொல்லமாட்டார்கள். நாளைக்கு வேண்டுமாயின் புறப்படலாம்.

அகிலா.—ஏண்டா! வந்தயாவழிக்கு? நானிருக்கிறது ஒனக்கு ஆகலையா? நல்ல தப்பா, நான் போறதும் ஒங்கம்மாபோறதுங் காட்டறேன். சித்தைப்பொறு. எல்லாரும் ஒண்ணுகூடிக்கிண்டு என்னைத் தொரத்தப் பார்க்கிறேளா? அவன் வரட்டும்: அவன் என்னசொல்றான் அதையும் பார்ப்பம், ஆமண்டையா வேணுமா, அம்மா வேணுமா இன்னுகேக்கிறேன். அம்பது ஆமண்டையா வேணுமின்னுலும் ஆப்பிடுவள்; ஒரு அம்மா ஆப்பிடுவளோ?

தருமஸம்வர்த்தனி.—எனக்குத் தூக்கம் வரதடி எத்தன்னாழி நின்னுகிண்டிருக்கிறது? அம்மா! என்னை இடுத்துக்கோடீ எனக்குக் காலைக்கடுக்கிறது. தூக்கம் ஒரண்டை கண்ணைச் சித்தாது.

(சாயாரை நோக்கிச்செல்ல, அவள் குழந்தையை எடுத்துக்கொண்டு போகின்றாள்.)

## A Rare Ancient Work on Astrology.

## குருசுக்கிரநாடி.

---

இப்பெயர் வாய்ந்த சோதிடக்கிரந்த மொன்றிருக்கின்றது. இது மிகவும் அருமையானது. இதன்கண் சிருஷ்டிக்கிரமமும், சூரியாதிகிரகங்கள் நக்ஷத்திரங்களின் உற்பத்திவிவரமும், சாரங்களின் கணிதமும், அதிசூக்ஷ்மமான பார்வைகளின் பயன்களும் சாதாரணமாய் நாமிப்பொழுது சோதிடசாஸ்திரத்திற் கண்டறிகின்ற விஷயங்களனைவற்றையும் நூறுமடங்கு அதிக விசேஷமாயும் விரிவாயும் எடுத்துரைக்கும் கோள கணிதக்காண்டங்களு மடங்கியிருக்கின்றன. கணிதவிஷயம் மிகவும் அற்புதமாயிருக்கின்றது. இதனிற் சொல்லிய அம்சங்களை நாம் குணித்துக் கண்டறியவேண்டுமாயின் வெகு பிரயாசப்படவேண்டும்; மிகுந்த நுட்பமான கஷ்டமான கணிதங்களடங்கி யிருக்கின்றன. ஜாதகப்பயன்களைச் சொல்லும்பாகம் பெரிதாயிருக்கின்றது. யுகாந்தரங்களிற் பிறந்தவர்களின் ஜாதகங்களுமிருக்கின்றன. வானவர், தேவர், தேவகணங்களின் சாதகங்களு மிருக்கின்றன. ஒவ்வொரு சாதகத்திற்கும் மூன்று கூறாக—பொது, சிறப்பு, சூக்குமம் என்னும் மூன்று விதமாகப் பயன் கூறப்படுகின்றது. பொதுப்பயனைவிடச் சிறப்புப்பயன் விசேஷமாயும், இதனைவிடச் சூக்குமப்பயனில் தினசரிவியவகாரப்பயனின் விவரமு மடங்கியிருக்கின்றது. ஒவ்வொரு லக்கினமும் 360-அம்சங்களாகப் பிரிக்கப்பட்டு, ஒவ்வொரு அம்சத்திற்கும் ஒவ்வொரு சாதகமும் இந்த ஒவ்வொரு சாதகத்திற்கும் பொது, சிறப்பு, சூக்குமமாகிய மூவகைப்பயன் விவரமும் காணலாம். ஐந்து கிரகங்களினாலமைந்த சாதகங்களும், ஏழு கிரகங்களினாலமைந்த சாதகங்களும், ஒன்பது கிரகங்களினாலமைந்த சாதகங்களுமிருக்கின்றன. இதனால், நம்காலத்துச் சோதிடர்கள் ஒன்பது கிரகங்களை யொப்புக்கொள்ள, இதற்குமுன் ஏழு கிரகங்களே வியவகரிக்கப்பட்டன வென்பதும், அதற்குமுன் ஐந்து கிரகங்களே வியவகரிக்கப்பட்டனவென்பதும் விளங்குகின்றது. இந்தக் கிரந்தம் பனையோலையில் ஒரு முழநீளம் ஒருமுழ (?) அகலமுள்ள (சுமார்) 260 - புத்தகங்களடங்கியதாய்த் தெளிவான தமிழ்நடையில் பாடல் ரூபமாக எழுதப்பட்டிருக்கின்றது. ஒருமுழ அகலத்தில் எத்தனை ஓலை ஏடுகளடங்குமோ கவனியுங்கள். 260-புத்தகங்களும் ஒரு வண்டிக்குப் பூர்த்தியான பாரமாகும். பிருகஸ்பதிபகவான் சுக்கிராசாரியருக்கு இந்தக் கிரந்தத்தை யுபதேசித்தனராம். இதனைத் தமிழிலெழுதினவர் யாவரோ? இதற்கு மூலம் சம்ஸ்கிருதத்திலுளதோ? சாதாரணமாய்ச் 'சுக்கிர நாடி' என்று சொல்லப்படும் கிரந்தம் இதற்குப்பிறகு எழுதப்பட்ட சிறுகிரந்தமெனக் கொள்ளல்தகும். இவ்வளவு விரிவாயும் பூர்த்தியாயும் உள்ள கிரந்தம் மற்றொன்றில்லை யென வூகிக்கற்பாலது. வேண்டிய சாதகத்தைத்தேடி யெடுக்குமுறையும், பக்க அட்டவணையும், விஷய அட்டவணையும், வருஷமாதத்தேதிகள் தவறாமல் சாதகக்குறிப்புகளும் அந்தந்தக்காலத்துக் கிரகநிலைகளும் அவற்றின் பயன்களும், இதுகாறும் வானசாஸ்திரிகள் குணிக்காத, பார்க்காத, இனி அவர் குணித்துப்பரீட்சித்துப்பார்க்கின் சரியாய்த்திருக்கோசரமாகக்கூடிய கிரக நிலைகளும், இன்னும் சாஸ்திரிஜ்ஞர்களுக்கு வெகு உற்சாகத்தை யுண்டாக்கக்கூடிய பல அருமையும் பெருமையுமான சங்கதிகளும் மிகச் சிறப்பாயும் உண்மையாயும், அதனால், அற்புதமாயும் நுட்பமாயும் இந்தக் **குருசுக்கிரநாடி** யென்னுங் கிரந்தத்தில் விவரிக்கப்பட்டிருக்கின்றன. ஜன்மித்த, ஜன்மித்திருக்கிற, ஜன்மிக்கப்போகிற ஒவ்வொரு ஆன்மாவின் ஜாதகமும், அதன் பூர்வோத்தரங்களும், ஜீவிதசரித்திரமும் அதனிடையே அந்தச்சாதகருடைய புத்திரகளத்திர மித்திராதியருடைய ஜாதகம், விவரம் முதலியவைகளும், எந்தெந்தக்கிரகங்களின் பலாபல மகிமையினால் அந்தந்தச் சாதகருக்கு அந்தந்தக் காரியங்கள் நடக்கின்றனவென்பதும் இந்தக் கிரந்தத்திற் காணலாகும். இதனிற் கொடுக்கப்பட்டிருக்கும் வியக்கத்தக்க கணிதங்களை ஐரோப்பிய ககோள சாஸ்திரிகள் பார்த்தால் அவர்கள் அவைகளை யாராய்ந்து அக்கணிதப்படி வருங்காலத்துக் கிரக நிலைகளெல்லாம் தங்களுடைய திருக்கணிதத்திற்கியைந் திருப்பதை யறிந்து, இந்த நுட்பங்களை வெகுகாலத்திற்கு முன்னரே திராவிடப்பண்டிதர்க ளெப்படி யுணர்ந்தெழுதி வைத்தனரோ வென்று ஆச்சரியப்படுவதுடன், அவர்க ளிந்தக் கணிதங்களைத் துணையாகக்கொண்டு அநேக புதிய விஷயங்களையும் அறிவதற்கிடமுண்டு. கணிதபாகமிவ்வள வுண்மையாக, கிரகவிஷயங்களை யுணர்த்தும் சாத்திரம் அதன் பயன்களை யுணர்த்தும் பாகத்திலு முண்மையாகவே யிருக்கவேண்டுமென்னும் எண்ணம் அவர்களுடைய மனங்களிலும், அவர் போன்ற சோதிடத்தில் நம்பிக்கையில்லாத அநேக

ருடைய மனங்களிலும் ஜனிக்கும். ஜாதகத்தைப் பார்த்து விரலையெண்ணிப் பயனுரைக்கும் நாடோடிச் சோதிடர் சொல்லிய சில விஷயங்கள் நிறைவேறாததுகண்டு சிலரும், சோதிடத்தின் நுட்பமான கணிதங்களை யுணரத்திறமற்று சிலரும், சூரியாதி கிரகங்களின் சக்தி பூலோகத்தவர்மீது வியாபிக்கு முண்மையை யேற்காத சிலரும், புலன்களுக்குப் புலப்படாமல் சூக்ஷ்மமாய் அநேக சக்திகள் காரணரூபமாக வியவகரித்தாலன்றி ஸ்தூலமாகிய இந்த வுலகத்தில் ஒரு காரியமும் நடக்காது, காரணமின்றிக் காரியமில்லை, சூக்ஷ்மமின்றி ஸ்தூலமில்லை, கர்ப்பமின்றிப் பிரசவமில்லை, மனமின்றி வெளியில்லையென்னும் வேதாந்த சித்தாந்தசாஸ்திரத்தருங்கருத்தை யறியாத பலரும், வேதம் (அஃதாவது, ஞானம்) தனக்கு ஓரங்கமாகச் சோதிடசாஸ்திரத்தை யேற்படுத்திய தென்னையோவென்று மயங்கும் பலரும்—சோதிடமென்பது உண்மையான சாஸ்திரமன்றென்று நினைத்துவருகிறார்கள். இந்தக் குருசுக்கிரநாடியைப் பார்த்தாராய்ந்தால் அவர்களனைவர் நினைவும் கனவாகும், உண்மையுதிக்கும், ஆனந்தம்பொங்கும், முன்னோர்களதாராய்ச்சியினுழைத்தெரியும். வேறு பல நாடிக்கிரந்தங்களை யநேகர் பார்த்திருக்கலாம்; சிலர் நாடிக்கிரந்தங்களை வைத்துக்கொண்டு தம்மிடத்து வருவோரை ஆச்சரியப்படுத்தி விடுகிறார்கள். அவைகளிலெதுவுமிவ்வளவு சம்பூரணமான கிரந்தமாகாது; கணிதத்திற்கும் பரிக்ஷைக்கும் இதைப்போல் இடங்கொடாது. குறித்த ஜாதகத்தைத் தேடுவதற்கான சாதனங்கள் இந்தக் கிரந்தத்திலே அமைந்திருப்பது போல் மற்றெதனிலுமிரா.

இது மலையாளத்தையாண்ட காலஞ்சென்ற விசாக மகாராஜாவின் சோதிடஞன ஒரு வள்ளுவனிடமிருந்தது. இதனைத் திருவாவடுதுரை சைவ சித்தாந்தமடத்தாரின் சிபார்சைக்கொண்டு அந்த ஆதீனத்தன்பரொருவர் வெகு சிரமப்பிரயாசைப்பட்டு, மேற்சொல்லிய வள்ளுவனிடம் சுமார் ஒரு வருஷகாலம் காத்திருந்து அப்புத்தகங்களை யுபயோகிக்கும் விதத்தைக்கற்றுக்கொண்டு, பெருமொத்தமான திரவியங்கொடுத்து (அந்த வள்ளுவனுடைய மரணகாலம் சமீபித்ததனால் அவன் ஒப்புக்கொண்டான்) அவனிடத்திருந்து புத்தகங்களைக் கைப்பற்றிக்கொண்டார். புத்தகங்கள் வெகுகாலத்துப் பனையோலையிலிருப்பதனால் சிதிலமாகுந்தருணத்திலிருக்கின்றன. வேறுபிரதி கடிதாசியில் எழுதிவைக்கவெனினோ கூலி விசேஷமாகின்றது. ஏடுகளிலிருந்து பாடல்களைத் தவறில்லாமல் வாசித்து எழுதுவதற்குச் சோதிடசாஸ்திர மறிந்த தமிழ்ப்பண்டிதர்கள் வேண்டும். அச்சிடுவதெனினோ, அஃதசாத்தியமாம்; வெகு விரயமாகும்; வாங்குவோர் அரிதாகும். இந்த நிலைமையில் கிரந்தமிருக்கின்றது.

தி. அ. ஸ்வாமிநாத ஐயர்.

---

## SOUTH ARCOT DISTRICT BOARD'S OFFICE.

*Copy of a communication from the President, District Board, South Arcot:—*

I. To the Presidents of Tirukoilur and Cuddalore Taluq Board, dated 21st March 1901. Ref. Cur. No. 259., D. B. of 1901.

As the importance of sanitation is not understood in rural tracts it is very desirable that some copies of the Viveka Chintamani magazine should be purchased and suplied to the Inspecting Schoolmasters in view to enable them to deliver lectures—in Tamil—on sanitation in the schools which they visit. This preliminary measure will in course of time pave the way for the formation, in important localities, of associations through whose example and influence the principles of sanitation will be understood and practically followed by the rural population. Please therefore propose the purchase of some copies of the Viveka Chintamani in your Taluq Board Budget for the official year 1902-1903. The Taluq Boards of Tindivanam and Chidambaram are already purchasing some copies of the magazine and the Assistant Inspector of schools

has been requested to issue necessary instruction to the Inspecting school-masters employed under those Taluq Boards.

(True copy.)

(Sd.) T. GOPALASAWMY IYER,
*Vice President for President, Dt. Board.*

---

II. To the Assistant Inspector of schools, Arcot Division, Vellore, dated 21st March 1901. Ref. Cur. 259., D. B. of 1901.

In view to the principles and benefits of sanitation being understood by the rural population I have the honour to request that you will be good enough to instruct the Inspecting school-masters employed under the Chidambaram and Tindivanam Taluq Boards to deliver short lectures in Tamil on the subject of sanitation in the schools which they visit. To enable them to do this, the Taluq Board Presidents concerned have been requested to supply them with a copy of the Viveka Chintamani magazine which inculcates the principles of sanitation. This system may, in course of time, lead to the formation in important localities, of associations whose example and influence will make the principles of sanitation well understood and practically observed by the rural population

2. The Presidents of the Cuddalore and Tirukoilur Taluq Boards have been requested to propose the purchase of some copies of the Viveka Chintamani in their Budgets for 1902 –1903.

(True copy.)

(Sd.) T. GOPALASAWMY IYER,
*Vice President for President, Dt. Board.*

---

III. To the Presidents, Taluq Boards, Tindivanam and Chidambaram, dated 21st March 1901. Ref. Cur. No. 259., D. B. of 1901.

I have the honour to request that each Inspecting school-master under your Taluq Board may be supplied with a copy of the Viveka Chintamani magazine in view to enable him to deliver lectures (in Tamil) on sanitation in the schools which he visits. The Assistant Inspector of schools will be requested to issue necessary instructions to the Inspecting school masters. As the benefits of sanitation are not well understood in rural parts, it is very desirable that each Local Board should undertake to do all it can to make them understood and to form associations of influential persons in important localities in view to the priciples of sanitation being practically followed. As a preliminary measure the Inspecting school-masters will be asked to do all they can in the matter so as to pave the way for the formation of associations in course of time.

(True copy.)

(Sd) T. GOPALASAWMY IYER,
*Vice President for President, Dt. Board.*
25–3–1901.

---

Dr. W. G. King, C. I. E., the Sanitary Commissioner for Madras, referring to the movement, of which the Committee for the Diffusion of Sanitary Knowledge lately formed in Madras, is the centre, writes thus of its possibilities in the course of an official communication which he has kindly placed at our disposal:--" It will be seen that the Committee contemplates attempting spread of sanitary reform amongst the native population, by means of voluntary aid rendered by the numerous educated men who are now to be found in most inhabited areas throughout the Presidency. Scattered as these men are at present, they can do little more than deplore the absence of sanitary tendenices in their neighbours; but it is obvious that if they be welded together, so as to form a body acting of a set purpose at the discretion of a central body, possessed of clear conception as to the direction in which efforts should be made, and having locally the sympathy of officials who could make or mar the movement, definite results might in time be expected."..........

Referring then to the " Associations of Helpers" that have been formed in the mofussil, he proceeds:— " There can be no doubt that in the interests of sanitary advance in this Presidency, that a movement for reform which has been initiated by native gentlemen, and will follow the lines considered by them most likely to bring about the desired influence upon their countrymen, should receive every reasonable encouragement."

## விவேகசிந்தாமணிப் பிரசுரங்கள்.

இவை ஒவ்வொன்றும் நாணயமான இங்கிலீஷ் பைண்டு செய்து கில்ட் எழுத்துகள் பதித்துள்ளன.

**மாக்ஷிமைதங்கிய இந்தியா சக்கிரவர்த்தினியாகிய விக்டோரியா மஹாராணியவர்கள் சரித்திரம்.** 27-படங்களோடும், இந்தியா கவர்ன்மெண்டு, 'இந்தியா ஆபீஸ்' இவைகளின் அமைப்பு, அமுல்செலுத்தும் முறை விவரங்களோடும் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது. விலை ரூ. 1-4. V. P. P. ரூ. 1-8. அதிக கில்ட்கொடுத்தது ரூ. 1-6. V.P.P. ரூ. 1-10.

**புத்தரது திவ்விய சரித்திரம்.**—விலை அணு 14. V. P. P. ரூ. 1-2. அதிககில்ட்கொடுத்தது : ரூ. 1. V. P. P. மூலமாக ரூ. 1-4.

**விவேகமஞ்சரி.**—புஸ்தகம் I. இதிலடங்கியவை : (1) கோல்பர்ட்சரித்திரம். (2) சத்தியதேவதைக்கதை. (3). சிவாஜிமஹாராஜா சரித்திரம். விலை அணு 14. V. P. P. ரூ. 1-2. அதிக கில்ட்கொடுத்தது : ரூ. 1. V. P. P. ரூ. 1-4,

இம்மூன்று புஸ்தகங்களும் கில்ட் எழுத்துகளின்றி காலிகோ கட்டடம்செய்து தனித்தனியாகவும் கிடைக்கும் :

(1) கோல்பர்ட் சரித்திரம் : துணிவியாபாரிகடையிலிருந்து முதல்மந்திரிஸ்தானத்துக்குவந்தவாலிபன்கதை. விலை அணு 5. V. P. P. அணு 8.

(2) சத்தியதேவதைகதை : விலை அணு 5. V. P. P. மூலமாக அணு 8.

(3) சிவாஜி மஹாராஜாசரித்திரம் : விலை அணு 6. V. P. P. மூலமாக அணு 9.

**ஆபத்துக்கிடமான அபவாதம் அல்லது கமலாம்பாள் சரித்திரம்.** விலை ரூ. 1-8. V. P. P. ரூ. 1-14. அதிக கில்ட் கொடுத்தது : ரூ. 1-12. V. P. P. ரூ. 2-2.

**விவேகரஸத்தாலாட்டு.** 6 பை. தபாற்கூலி 6 பை.

வேண்டுவோர் சென்னை திருவல்லிக்கேணி அ. ப. ஏஜன்ஸி, காரியதரிசி ஸி. வி. சாமிநாதய்யர் அவர்களுக்கு எழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

### கமிஷனுக்கு விற்கப்படும் புஸ்தகங்கள்.

| | | | |
|---|---|---|---|
| மாலதிமாதவம் | ... | ... | விலை அணு 5. |
| தினதயாளு... | ... | ... | ,, ,, 8. |
| கல்வி விளக்கம் | .. | | விலை ரூபா 1-0-0. |

தபாற்கூலி பிரத்தியேகம்.

*Apply to the D. K. Agency, Triplicane, Madras.*

### Photographs of Temples and Idols of Southern India.

*Hindu Temples:*—1. Srirangam, Saptaprakaram. 2. Conjeeveram, Varadarajaswami Temple. 3. Dakshana Badarikasramam or Melkota. 4. Somanadhapuram Temple. 5. Tanjore, Brihadiswaran Temple. 6. Tirukkudanthai or Kumbakonam, Sarangapani Temple. 7. Ghatikachalam or Sholingar: (i) Narasimhaswami Hill and (ii) Anjaneyaswami Hill. 8. Chidambaram, Nataraja Temple. 9. Madura, Minakshi Temple, full view from Northern Street.

SIZE 12 in. by 14 in.

**Price Rs. 2, per copy, postage and V. P. Commission extra.**

*Perumals, &c*:—1. Varadarajaswami of Conjeevaram, Garudautsavam, Gopuradarsanam. 2. The same with all the jewels on the Tiruvavataram day. 3. Perundevi Tayar of Conjeeveram. 4. Tirunarayanapuram or Melkota, Chellapillai with all jewels and with Upayanachchiyar. 5. Tirumaliruncholai Perumal or Kallalagar, on the day of Chitrapournami, decorated as a robber. 6. The same, on the next day with Rajathirkkolam. 7. Mannargudi, Rajagopalan or Rajamannar, E'kanthasevai. 8. The same, Asthanam with Upayanachchiyar. 9. Madura Minakshi. 10. Kanchi Kamakshi. 11. Nataraja, Arudradarisanam. 12. Tirukkudanthai or Kumbakonam Aravamuthan decorated in four ways. 13. Komalavalli Tayar of the same place. 14. Srighatikachalam or Sholingar, Anjaneyaswami with four hands. (No other temple has this kind of murti). 15. Tiruvallur Viraraghavar.

Also of Paramahamsa Ramakrishna, Swami Vivekananda, Swami Saradananda, Mrs. Annie Besant, Madam Blavatsky, Col. Olcott.

**Cabinet size. Price Re. 1. per copy, postage and V. P. commission extra.**

## Ready for Sale.

Photo of Lord Ampthill and his staff at Conjeeveram taken with the permission of His Excellency. Also, several Picturesque Sceneries of Lower and Upper Tirupati.

To be had of T. G. APPAVU MUDALIYAR & SON,
*Photographers and Artists,*
*Triplicane, Madras.*

## THE VIVEKA CHINTAMANI SERIES.

# KANTHIMATHI—A NOVEL IN TAMIL.

## (AFTER SCOTT'S TALISMAN)

BY

## K. V. SUBHAYYA IYER, B.A., L.T.

கே. வி. சுப்பய்யர், பி. எ., எல். டி., அவர்களால்

இயற்றப்பட்ட

## காந்திமதி

என்னும் தமிழ்க்கதை

சிக்கிரத்தில் புத்தக ரூபமாய் வெளியாகும்.

---



---

Vol. X.] JULY, 1901. (REGISTERED-NO. M. 108.) [No. 3.

# THE VIVEKA CHINTAMANI

## A MONTHLY TAMIL MAGAZINE AND REVIEW.

DEVOTED TO THE DIFFUSION OF GENERAL KNOWLEDGE.

# விவேகசிந்தாமணி

அறிவைப் ÷ பரவச்செய்வதற்கான ÷ மாதாந்தரத் ÷ தமிழ்ப்பத்திரிகை.

"அறிவுடையா ரெல்லா முடையா ரறிவிலா
ரென்னுடைய ரேனு மிலர்."—குறள்.

CONTENTS. PAGE.



அட்டவணை. பக்கம்.



Thick Paper Edition for Patrons.] PUBLISHED BY [Minimum Subscription Rs. 5.

C. V. SWAMINATHA AIYAR,

Secretary, Diffusion of Knowledge Agency, Triplicane,

MADRAS.

Thin Paper Edition for the People. Price of Single Copy As. 6.]



[Subscription Rate: Yearly Rs. 4; If Paid Half-Yearly Rs. 2-2.

FOR FULL TERMS OF SUBSCRIPTION SEE INSIDE.

## Notice to Subscribers.

Subscribers to the Viveka Chintamani are earnestly requested to remit their subscriptions in advance before 30th June. All subscriptions that remain unpaid after that date will be collected at the usual rate of Rs. 4.

## சந்தாதாரர்களுக்கு அறிக்கை.

சந்தாதாரர்கள் எல்லோரும் ஜூன்மீ 30உக்குள் சந்தாத்தொகையை முன்பணமாக அனுப்பிவிடவேணுமென்று கேட்டுக்கொள்கிறோம். அத்தேதியிலிருந்து பாக்கிநிற்கும் சந்தாக்கள் வழக்கமாயுள்ள ரூ. 4 விகிதம் வசூல் செய்யப்படும். முன்பணமனுப்பத் தாமதிப்பதால் பத்திரிகை வெளியாவதும், தாமதப்படுவதால் எல்லோரும் சந்தாவை முன்பணமாகவே அனுப்பிவிடவேணுமாய் மிக வற்புறுத்திக் கேட்டுக்கொள்கிறோம்.

அ. ப. ஏஜன்ஸி,
காரியதரிசி.